ஸ்ரீ

# கலியுகப் பிரகலாதன்

இயற்றியவர்:


திரு. T. S. ஸ்ரீபால் அவர்கள்

(சொற்பொழிவாளர் தெ. இ. ஜீவரக்ஷா பிரசாரக சபை.)

சென்னை.



வெளியிடுபவர்:

தென்னிந்திய ஜீவரக்ஷா பிரசாரக சபையார்

436, தங்கசாலை வீதி,

சென்னை.




[விலை அணா 8.

## *THE VETERAN'S WORD.*

*Pammal Lodge,*
*George Town, Madras.*

The author of this drama has asked me to write an "Introduction" to his work and I do so with great pleasure, especially as this drama is not one following the old oft-trodden lines of Tamil drama, but one depicting present day Life. The theme is an interesting one especially as it deals with a burning question of the present day. It is written in a simple and chaste style, and it must appeal to all lovers of animal life. I wish the author turns out more and more works of a similar nature.

*(Sd ) P. Sambandam.*

# முன்னுரை.

நம் பாரதநாட்டின் மூல தர்மமாகிய ஜீவகாருண்யமெனுஞ் சீரிய தர்மத்தை மக்களிடை நிலைநாட்டுதற்குப்பல் வேறு இடங்களில் பலப்பல சங்கங்கத்தினரும் தனிப்பட்ட அன்பர்களும் தொண்டாற்றி வருகின்றார்கள். நந்தமிழ் நாட்டின்கண் சென்னை தென்னிந்திய ஜீவரட்சா பிரசாரக சபையே ஜீவகாருண்ய தொண்டில் தலைசிறந்து விளங்குகின்றதென்பதை அன்பர்கள் யாவரும் நன்கறிவர். இச் சபையில் அடியேன் ஒரு தொண்டனாக அமர்ந்து பல துறைகளிலும் பணியாற்றி வருகையில் நாடகரூபமாகவும் பிரசாரம் செய்தல் நல மென உணர்ந்து **பாலசுந்தரம் அல்லது பலியின் கொடுமை** யெனும் நாடகத்தையெழுதினேன். அது பலவிடங்களிலும் பல அன்பர்களால் நடத்தப்பட்டு நல்ல பலனை அளித்தது. அதனால் **கலியுகப்பிரகலாதன்** எனும் இந்நாடகத்தையும் எழுத முன்வந்த னன். இங்ஙனமாக எழுதப்பெற்ற இந்நாடகம் போலியாக பரவி வரும் சிறுதெய்வ வழிபாட்டையே ஒழிக்கவேண்டுமென்ற முறையில் எழுதப்பட்டுள்ளது. நமது நாட்டில் ஜீவகாருண்ய ஒழுக்கத்தைப் பரப்பவேண்டுமென அவாக்கொண்ட ஒவ்வொரு அன்பர்களும் இச் சிறு தெய்வ வழிபாட்டை ஒழித்தாலன்றி அருள்நெறியைப் பரப்ப முடியாது எனும் முடிவுக்கேவருவார்கள். உண்மையானஜீவகாருண்ய சீலமுடைய குடும்பத்தினராயினும் தங்கள்வீட்டில் மகப்பேறில்லாத காலத்திலும் உயிரைப்போக்கும் பிணியுற்றகாலத்திலும் இந்துமதத் தினராயின் பலர் இச் சிறு தெய்வ வழிபாட்டில் நம்பிக்கைகொண்டு உயிர்ப்பலிக்கு உடன்பட்டு விடுவார்களென்பது திண்ணம்! திண் ணம்!! இத்தகைய மூடபக்தியால் நமது நாட்டில் திக்கற்ற ஊமைப் பிராணிகள் பலவிதமான சித்ரவதைகளுக்காளாகின்றன வென்பதை நினைக்கவும் நெஞ்சம் பதறும். இக்கொடிய வதைகளை அடியேனால் இயற்றப்பட்ட **கிள்ளைவிடுதூது** எனும் பாட்டில் காணலாம். இப் போலிச் சிறு தெய்வ வழிபாட்டைக் குறித்து திருநாவுக்கரசு

சுவாமிகளும், இராமலிங்க அடிகளும் கண்டித்துள்ளார்கள். இச்சிறு தெய்வ வழிபாடு சுயநலப் பிரியர்களால் நமது நாட்டில் ஈஸ்வராலயத்திலும் புகுத்தப்பட்டுள்ளது என்பதை சைவ சித்தாந்த அன்பர்களுக்கு வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகின்றேன். இந்நூலில் பலி வழக்கம் காட்டு வழக்கமென்பதை விளக்கி, பூசாரிகளின் கொடுமைகளையும், பேதைப்பெண்களின் நம்பிக்கையையும், பாமரர்களின் மூடபக்தியையும் நன்கு எடுத்துக் காட்டியுள்ளேன். ஜீவகாருண்ணிய பிரசாரம்செய்யும் அன்புடைய தொண்டர்களுக்கு இந்நாடகம் பெருந்துணையா யிருக்குமென்ற அவாவினால் சிறியேனால் எழுதப்பெற்ற இந்நாடகத்தை ஆன்றோர் மேலாகக்கொள்வார்களென நம்புகிறேன்.

சென்னை,<br>5—1—'34

அன்புள்ள,<br>**T. S. ஸ்ரீபால்.**

# நாடக பாத்திரங்கள்.

மன்னார்சாமி நாய்க்கர்-எருதிகுப்பத்துப்பெரியமிராசுதாரர்.

சிவநேசன்—மன்னார்சாமி நாய்க்கர் புதல்வன்.

(கலியுகப் பிரகலாதன்)

தயாசாகரர்—சிவநேசனுக்குச் சிறு தெய்வங்களின் பொய்மையையும், ஜீவகாருண்யத்தின் மேன்மையையும் போதித்தவர்.

மாரியப்பப்பூசாரி—எருதிகுப்பத்து கிராமதேவதை கோயில் பூசாரி, திண்ணைப்பள்ளிக்கூட உபாத்தியாயர்.

முருகேசன், கன்னி, நாராயணன், முனுசாமி, முருகன், மணி, கருப்பன் — பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள்.

கந்தப்பப் பூசாரி—மேட்டூர் ஜமீன் மாரிகோயில் பூசாரி.

சப்பாணி பூசாரி—செதுப்பேரி பூசாரி.

முனியாண்டி—மாரியப்பப் பூசாரியின் சகோதரன்.

கேசவராஜ்—மேட்டூர் ஜமீன்தாரர்.

இராதாபாய்—ஜமீன்தாரர் மனைவி.

சண்பகம்—இராதாபாயின் தோழி.

எல்லம்மாள்—மன்னார்சாமி நாய்க்கரின் மனைவி.

வேடராஜன்—வேட்டுவக் கொள்ளைக்கூட்டத் தலைவன்.

திம்மன், நொண்டி, தோப்பை—காட்டுதுர்க்கிகோயில் பூசாரிகள்.

சர்க்கிள் இன்ஸ்பெக்டர், சார்ஜண்டுகள், போலீஸ் கான்ஸ்டேபில்கள், காவல்காரன், கிராமத்தார், வேடர்கள்.

ஸ்ரீ

# கலியுகப் பிரகலாதன்.

## அங்கம். 1

### காட்சி 1.

இடம்—எஞதி குப்பத்தில் ஓர் திண்ணைப் பள்ளிக் கூடம். மாரியப்ப உபாத்தியாயர் (மாரி கோயில் பூசாரி) பனந்தடுக்கில் வீற்றிருத்தல். இரண்டு பக்கங்களிலும் பையன்கள் படித்துக் கொண்டிருத்தல்.

உபாத்தியாயர்—சிவநேசா! உங்களுடைய பாடங்களைக் கொண்டு வாங்கள்.

சிவநேசன்—இதோ வந்து விட்டேன். முருகேசா, கன்னி முத்து, வாங்கள் பாடம் ஒப்பிக்க வேண்டும்.

(நால்வரும் வருதல்)

உபாத்தியாயர்—இன்று என்ன பாடம்.

சிவநேசன்—மதுரைவீரன் கதையும் மாரியம்மன் தாலாட்டும்.

உபாத்தியாயர்—சரி, ஒப்பிங்கள்.

பாட்டு

சிவநேசன்—"கோட்டைக் குலிக்காரன் குமரமுத்து [நாய்க்கன் மேல்
ஆவேசமாக அவன் பேரில் கொக்கரித்து
திருவாய்மலர்ந்து செப்பலுற்றார் அந்நேரம்"

உபாத்தியாயர்—அடுத்தவன்.

பாட்டு

அடுத்தவன்-"என்னை நினைக்காமல் இதுவரையிலேயிருந்தீர்
பொருந்தி பசியாறி பூரித்தேனிப்போது
என்பெயரைச் சொல்லி ஈந்தால் விபூதிதன்னை
வந்தபிணி நோயும் வாராமற் போகுமடா"

உபாத்தியாயர்—போதும்! முத்து! மாரி தாலாட்டு சொல்லு!

பாட்டு

முத்து—"கானகத்தில் வீற்றிருக்கும் கன்னனூர்மாரிமுத்தே
உச்சங் குறக்கூடை இருக்கட்டும் பொன்னாலே
தாழுங் குறக்கூடை தனிக்கட்டும் பொன்னாலே
எருமைக்கடா காவுனக்கு எக்காலத் தேவியரே"

உபாத்தியாயர்—சரி! சரி!! முத்தா! கொப்பன் ஏன்டா இன்னும் சம்பளம் கொடுக்கலே. பிசாத்து இரண்டு மாக்கா நெல்லு. இதற்கு 6 மாசம் வாயிதாவா? எல்லம்மா கோயில் படித்தாமுங் கொடுக்கலே.

முத்தன்—நாளைக்கு வாங்கிக்கின்னு வந்து விடுறன் ஸார்.

உபாத்தியாயர்—சரி நீங்கள் போங்கள். நாராயணா! உங்கள் பாடத்தை கொண்டு வாங்கடா.

(எல்லாரும் வருதல்)

உபாத்தியாயர்—நாராயணா! தெய்வங்களின் பேர் வழிகள் தானே பாடம்!

நாராயணன்—ஆமாங்க!

உபாத்தியாயர்—சரி வரிசையாய் ஒப்பி.

நாராயணன்—இருளன், காட்டேரி, மன்னார்சாமி, பொன்னார்சாமி மதுரைவீரன், மாடன், கருப்பன், சங்கிலிக், கருப்பன்.

உபாத்தியாயர்—அடுத்தவன்.

முனுசாமி—காத்தவராயன், பாவாடைராயன், பூவாடைராயன், சின்னான், தொட்டியத்துச் சின்னான்.

உபாத்தியாயர்—சரி முருகா நீ!

முருகன்—மாரியம்மா, கோரியம்மா, காளியம்மா, கூளியம்மா, கேளி அம்மா, எல்லம்மா, செல்லம்மா, கொல்லம்மா, அங்காளம்மா, பங்காரம்மா.

உபாத்தியாயர்—அடுத்தவன்.

அடுத்தவன்—பச்சையம்மா, கச்சியம்மா, கங்கம்மா, புங்கம்மா, சங்கம்மா, சக்கம்மா, சொக்கம்மா, போலேரம்மா, காலேரம்மா, (தெரியாது விழித்தல்).

உபாத்தியாயர்—என்டா! தெரியவில்லையா? கையை நீட்டு (அடித்தல்) அடுத்தவன்.

அடுத்தவன்—கழுகுளம்மா, பேச்சியம்மா, பூச்சியம்மா, கொல்லாபுரி அம்மா, ஊமைச்சம்மா, ஆரூரம்மா, பேரூரம்மா, செங்காளி அம்மா, ஊத்துக் காட்டம்மா.

உபாத்தியாயர்—அடுத்தவன்.

அடுத்தவன்—படைவேட்டம்மா, வெட்டுவானத்தம்மா, கன்னனூரம்மா, மலையனூரம்மா, பெரியபாளையத்தம்மா, கொரங்கனி அம்மா, மங்களாயி அம்மா, கமலக்கன்னி அம்மா.

உபாத்தியாயர்—அடுத்தவன்.

அடுத்தவன்—செருப்படி மாரியாத்தா, அவுசாரி மாரியாத்தா, எகாத்தா, சொக்காத்தா, பேயாத்தா, பூதாத்தா, நெல்லாத்தா, செல்லாத்தா.

உபாத்தியாயர்—மணி! நீ மேலே சொல்.

மணி—சண்டைமாரி, தண்டுமாரி, குண்டுமாரி, முண்டைக்கண்ணி, திண்டுவிரி, கொண்டைக்காளி, குழூமியாயி, பனைமரத்தா, வேப்பமரத்தா, ஆலமரத்தா, அரசமரத்தா, சட்டிமாரி, கந்தமாரி, பெரிய மொட்டை, சின்ன மொட்டை, சப்பாணி, முனியாண்டி.

உபாத்தியாயர்—இன்றைக்கு இதோடு போதும். நாளைக்கு மற்றது படித்து வாங்கள்.

உபாத்தியாயர்—கருப்பா! என்டா இன்னும் சம்பளம் கொடுக்கலே.

கருப்பன்—எங்கம்மா உங்கள் பள்ளிக்கூடத்தில் படிக்க வாணுமின்ருங்க. பக்கத்தாரு கவர்னர் பள்ளிக்கூடத்தில படிக்கவச்சி கலெக்டர் வேலைக்கு அனுப்பப் போருங்களாம்.

உபாத்தியாயர்—சீ கழுதை! எந்தப் பள்ளிக்கூடத்தில் போனலும் உனக்கு கள் கொத்துகிற வேலைதான் வருமே தவிர கலெக்டர் வேலை வராது. எங்கேயனு ஒழுஞ்சிப் போங்க. நம்ம சம்பளத்தை கட்டிவிட்டுப் போங்க. (மற்ருெருவனைப் பார்த்து) நீ ஏண்டா சம்பளங் கொடுக்கல. நொப்பன் உன்னை எந்த காலேஜுக்கு அனுப்பப் போருன்.

மற்ருெரு பையன்—எங்கப்பாவண்டை நீங்க 4 ரூபா கடன் வாங்கிக்கினு 5 6, மாதமா ஏமாத்திரீங்களாம். அப்பா ரொம்ப கோவுச்சிக்கிருங்க.

உபாத்தியாயர்—சீ மூண்டம்! வாயை மூடு. சிவநேசா நீங்கள் வாருங்கள்.

(அந்த சமயத்தில் நயாசாகார் என்ற ஒரு சாது அப் பள்ளிக்கூடத்தின் பக்கத்திலுள்ள ஒரு மரத்தடியில் இளைப்பாற உட்காருதல்)

உபாத்தியாயர்—சிவநேசா! நாம் வணங்கும் மாரியம்மனின் சக்தி யென்ன?

சிவநேசன்—நாம் அனுபவிக்கிற பலவித நோய்களையும், வைசூரி வாந்திபேதிமுதலிய தொத்து வியாதிகளையும் உண்டாக்கவும் அழிக்கவும் வல்ல லோகாமாதா! மனிதரின் உயிருக்காக ஆடு, கோழி, பன்றி, எருமைக்கடா முதலிய உயிர்களைப் பலி வாங்கிக் கொண்டு உயிருக்குயிர் கொடுப்பாள். மாரியம்மனுக்கு நடத்தவேண்டிய சிறப்புக்கள் குறைந்தால் ஊரில் நோய்களையும் கால்நடைகளுக்குக் கோமாரி முதலிய நோய்களையும்

உண்டாக்கி ஊரை அழித்து விடுவாள். மகா கோபக்காரி. பிரார்த்தனைக்காரர்கள் பிரார்த்தனையைச் செலுத்தத் தவறினல் அவர்கள் குடும்பத்தையே நாசமாக்கி விடுவாள்.

உபாத்தியாயர்—நல்லது. நம்ம தெய்வங்களுக்கு மிகவும் விருப்பமானதெது. முத்தா நீ சொல்.

முத்தன்—ஆடு, கோழி, பன்றி, எருமைக்கடா முதலிய பலிகளிலும் கள், சாராயம் முதலிய லாகிரிகள் பேரிலேயும் அதிக விருப்ப முடையவள்.

(சாது! காதை மூடிக்கொண்டு அப்பப்பா என்ன பாடம்! என்ன கல்வி, என்ன போதனை, அநியாயமே! அப்பா! ஈசா இது உன் திருவுளச் சம்மதமோ)

உபாத்தியாயர்—ரொம்ப சரி! நமக்கு வரும் குறைகளும் நோய்களும் தெய்வத்தாலென்று நாம் எப்படி தெரிந்துகொள்ள முடியும்? அடுத்தவன் சொல்.

அடுத்தவன்—அம்பாள் யார் பேரிலாகிலும் ஆவேசமாக வந்து கூறும், அல்லது பூவாகிலும் பழமாகிலும் கொடுக்கும்படி கேட்டால் கொடுக்கும்.

உபாத்தியாயர்—சிவநேசா! இத்தகைய சக்தி நிறைந்த அம்மனை யாராகிலும் நிந்தித்தால் என்ன செய்வாள்? அதைப் பாட்டோடு சொல்.

பாட்டு.

சிவநேசன்—"பரிகாசம் பண்ணவரைப் பல்லைப் பிடுங்கி [வைப்பாள்
சிரித்தார் முகத்தையம்மா செல்லரிக்கக்கண்டிடுவாள்
தீண்டாவிஷம்போலே தீண்டிவிட்டுப்பார்த்திருப்பாள்
அடங்காத மானிடரை ஆட்டிவைக்கும் மாரிமுத்து
துஷ்டர்கள் தெண்டனிட துடுக்கடக்கும் மாரிமுத்து"

என்று நம் பெரியோர்கள் மாரியம்மன் தாலாட்டில் விளக்கியுள்ளார்கள்.

உபாத்தியாயர்—ஆமாம்! ஆமாம்! அதனாற்றான் மாரி பிடாரி தெய்வங்களை ஊருக்கிரண்டு மூன்றாகவும், நகரங்களில் நாற்றுக்கணக்காகவும், மதராஸில் மாத்திரம் திண்ணைக்கொன்றாகவும் சுமார் 5000 சாமிகளை வைத்து வணங்கி வருகின்றார்கள். பிரார்த்தனைக்காரர்கள் தங்கள் பிரார்த்தனைகளைச் சரிவர செலுத்தாவிடில் அதோகதி பாதாள லோகந்தான். மஹா பொல்லாத கோபி. நமது மாரி பிடாரிகள் இல்லாவிடில் நமது துன்பங்களையும் நோய்களையும் நீக்க வழியில்லாது வருந்த நேரும். நீங்கள் யாவரும் நமது மாரி பிடாரி பக்தர்களாக விளங்கவேண்டும்.

(சாது தலையைஅசைத்து மூக்கின்மேல் விரலை வைத்து ஆச்சரியப்படல்.)

சிவநேசன்—ஐயா! நம்மூரில் எப்பொழுது திருவிழா ஆரம்பம்.

உபாத்தியாயர்—இன்றைக்கு தேதி 25. இதில் ஒரு 5-நாள், ஆடி மாதத்தில் ஒரு 7-நாள் ஆகமொத்தம் 12 நாட்கள் இருக்கின்றன.

சிவநேசன்—எங்கள் வீட்டில் எனக்காக ஒரு பிரார்த்தனை இருக்கின்றது.

உபாத்தியாயர்—ஓ! வெகு ஆடம்பரமாக நடக்கும். எங்களுக்கெல்லாம் நல்ல லாபந்தான்.

சிவநேசன்—எனக்கு மயிர் வாங்கி நான் வளர்த்து வருகின்ற ஆட்டை சாமிக்கே கொடுத்துவிடப் போகின்றோம். கூழ் வார்த்து கும்பமுங் கொட்டித் திருவிழாவுஞ் செய்யப்போகின்றோம்.

உபாத்தியாயர்—உனக்கென்ன குறைச்சல். இந்த ஊருக்குள்ளாக நீங்கதானே பணக்காரர். 10 ஆடுகூட பலியிடலாம். இந்தவருஷம் நம்மூர் திருவிழாவில்

பிரார்த்தனைக்காரர்கள் நிறைய வருவார்கள். சுமார் 500, 600, ஆடு கோழிகள் பலியாகும். வேஷங்கள் கூட விதவிதமா பலபேர் போடுவாங்க.

முத்து—ஆம். எங்க தெருவில் எல்லாரு வீட்டிலேயும் பலியிட ஆடு வாங்கி விட்டாங்க. எங்க அப்பா குரு விக்கார வேஷமும் எங்க அண்ணன் லண்டன் வேஷமும் போட போறாங்க.

உபாத்தியாயர்—சரி நாழிகையாய் விட்டது. வீட்டிற்குப் போய் சாப்பிட்டு வாருங்கள்.

உபாத்தியாயர்—மாரி பிடாரிக்கு ஜே!

பையன்கள்—ஆடு கோழி பலிவாங்கும் அம்பாள் மாரியம்மாளுக்கு ஜே.

(எல்லோரும் போதல்.)

## காட்சி 2.

### தெரு சீன்.

(பிள்ளைகள் வெளியே வருவதைக் கண்ட சாது பாட ஆரம்பித்தல்.)

“ அன்பெனும் பிடியுளகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகு மரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தம ரமுதே
அன்பெனுங் கடத்துளடங்கிடுங் கடலே
அன்பெனு முயிரொளி ரறிவே
அன்பெனு மணுவுள் ளமைந்தபே ரொளியே
அன்புருவாம் பர சிவமே. ”

(பாட்டினைக் கேட்டுச் சிறுவர்கள் சாதுவினிடம் செல்லல். சாதுவும் சிறுவர்களை வரிசையாக உட்காரச் சொல்லல். எல்லோரும் உட்காரல். சிவநேசன் மாத்திரம் சாதுவின் பாதத்தில் வீழ்ந்து வணங்கி நிற்றல்.)

சாது—நல்ல அறிவும் அன்பும் நிறைந்தவனாகி எல்லாம்வல்ல இறைவன் பக்தியால் நீண்ட ஆயுள் பெற்றய்வாயாக!

(சிவநேசன் அடக்கமாகவும் பக்திபாகவும் உட்காரல். சாது மறுபடியும் பாடல்.)

" நலிதரு சிறிய தெய்வமென்றையோ
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடுபன்றிகுக் குடங்கள்
பலிக்கடா முதலிய உயிரைப்
பொலிவுறக் கொன்றே போகவுங்
கண்டே புந்தி நொந்து உளநடுக்குற்றேன்
கலியுறு சிறிய தெய்வவெங்கோயில்
கண்ட காலத்திலும் பயந்தேன். "

சிவநேசன்—சாமி! தாங்கள் கூறிய கவி என் மனதைக் கொள்ளை கொண்டது. அக் கவியில் கூறியபடி வேறொரு உண்மைத் தெய்வம் இருப்பதாகவும் ஆடு, கோழி முதலிய உயிர்களைப் பலிகேட்கும் தெய்வமென்பது பொய்யென்றும் புலனாகின்றது. நாங்கள் படிப்பது போன்று பலிகேட்குந் தெய்வங்கள் கற்பனைதானா! சுவாமிகள் இதனை விளங்கக் கூறவேண்டும்.

சாது—சிவநேசா! அஃது ஓர்பரம இரகசியம். அதனை உனக்குத் தனியாகபோதிக்கவேண்டும். அதோ தெரிகின்ற மாந்தோப்பிற்குச் சிறிதுநேரம் என்னோடு வருவாயாகில் உண்மையை விளக்குகின்றேன்.

சிவநேசன்—சாமி! அவசியம் வருகின்றேன். சுவாமிகள் கட்டளைப்படி நடக்க அடியேன் கடமைப்பட்டுள்ளேன்.

முத்து—என் சாமி! அந்த சங்கதியை எங்களுக்கெல்லாம் சொல்லமாட்டீரோ?

சாது—தம்பி! அவசியம் சொல்லுகிறேன் கேளுங்கள். தெய்வம் என்பது எல்லா உயிருக்கும் ஒன்றே. அது ஆடு, கோழி, பன்றி, எருமைக்கடா முதலிய உயிர்களைப் பலியாகக் கேட்காது. பூமி, சூரியன், சந்திரன், வாயு, வருணன் முதலிய இயற்கையான கண்கண்ட தெய்வங்கள் எவ்வுயிர்க்கும் பொதுவாக அருள்வது போல தெய்வமும் கருணையுடையதே.

மற்றொருசிறுவன்—நல்ல சாமியார் நீ! டே முத்து இவர் பேச்சைக் கேட்காதே! நம்ம வாத்தியார் சாஸ்திரங்களிலிருந்து எத்தனையோ தெய்வங்களைக் கத்துக்கொடுத்தார். அவைகளுக்கு ஆடு கோழி கொடுக்கணுமனு கூட சாஸ்திரத்தில் எழுதிவச்சியிருக்குது! இவரென்னமோ சொல்றாரு ஒரே தெய்வமாம்! பலி கொடுக்கக் கூடாதாம்! சீ! வாங்கடா போகலாம்! சிவநேசா நீகூட வந்துவிடு. இவர் பேச்சைக்·கேட்டா நம்ம மாரிதேவி கோவிச்சிப்பா! ஊர்ல வாந்தி பேதி வந்துவிடும்.

மற்றவர்கள்—ஆமாம் ஆமாம்! நாம் தான் சாஸ்திரத்திலேயே படிச்சமே! வாங்கடா போகலாம்! சிவநேசன் என்னமோ அவர் காலில் விழறான்.

சிவ—நீங்கள் போங்கள். நான் பின்னால் வருகின்றேன்.

மற்ற—நீ வந்தா வா! வராவிட்டாபோ! நாங்கள் போறோம்.

(எல்லோரும் போதல்.)

(சிவநேசனும் சாதுவும் மாஞ்சோலை பக்கம் திரும்பல். மற்றச்சிறுவர்கள் அவ்விடத்திலுள்ள முள் செடியில் பதுங்கிக் கொண்டிருந்த பாம்பைக் கண்டு கூச்சலிட்டுக் கற்களால் அடித்தல்.

இரையை விழுங்கிவிட்டிருந்த அந்த பாம்பு நகராது மெதுவாக போதல். அதைக் கண்டு சாது ஓடிவரல்.)

சாது—தம்பிகளே! அதை அடிக்காதீர்கள். பாவம்! இறந்துவிடும். நீங்கள் சும்மா இருங்கள். நான் அதை அந்த இடத்தை விட்டு ஓட்டிவிடுகின்றேன்.

சிறுவர்கள்—ஐயையோ! இது என்ன சாமிடா! பாம்பை அடிக்கக் கூடாதாம்! அவரை கடிச்சா அப்ப தெரியும், எடுடா கல்லே, கொல்லுங்கடா!

சாது—தம்பிகாள்! என் பேச்சைக் கேளுங்கள். உங்களை இப்போது கடித்ததா? அது நிறைய தீனி தின்று விட்டு நகர முடியாமல் கிடக்கிறது. அதையேன் அடிக்கவேண்டும். போங்கள்! உங்களை கும்பிடு கிறேன்.

சிறுவர்கள்—ஏன் சாமி! அது கடிச்சா நாம் செத்துப் போக மாட்டோமா?

சாது—வாஸ்தவந்தான். ஆனால் அது மனிதரைக் கொல் வதற்காக பிறந்தில்லே. நாம் தனியே சென்றால் கையில் தடியோ, கத்தியோ, துப்பாக்கியோ எடுத் துக்கொண்டு போவதுபோல அந்த ஜீவராசிகளும் தங்களுக்கு யாராகிலும் தீங்கு செய்தால் அவர் களிடத்திலிருந்து தப்பித்துக் கொண்டுபோக விஷத் தைப் பெற்றிருக்கிறது. இவ்வாறு இயற்கையாக படைக்கப்பட்டது. அதுவோ வலியவந்து நம்மைக் கடிக்காது. நம்முடைய கையோ, காலோ அதன் பேரில் உறுத்தலாகப் பட்டுவிட்டால் உடனே கடித்து விடும். ஆகையால் நாம் ஏன் அதை அடிக்க வேண்

டும். அதைக் கண்டவுடன் தூர விலகிவிட்டோமே யானால் அது நம்மை ஒன்றுஞ் செய்யாது. நாம் இந்த ஒரு பாம்பை அடித்துக் கொன்று விட்டால் உலகிலுள்ள பாம்புகளெல்லாம் இறந்து விடுமா? இல்லை. கணக்கிலடங்காத பாம்புகள் இருக்கின்றன. மேலும் நம்மைப் போன்று உலகில் பிறந்துள்ள எந்த உயிரையும் கொலை செய்ய நமக்கு உரிமையில்லை. அவ்வாறு செய்தல் பாவம்! உங்களை கும்பிடுகிறேன், (கும்பிடுதல்) பாம்பை அடிக்காதீர்கள் போங்கள்.

சிறுவர்கள்—வாங்கடா போகலாம்! அது யாரோ பைத்தியக்கார சாமியா யிருக்கிறது.

மற்றொரு பையன்—ஏண்டா! சாமி சொன்ன விட்டுறதா! அதை கொன்று விட்டுதாண்டா போகணும். கல்லை யெடுடா?

சாது—சரி! நான் ஒரு மந்திரஞ் செய்து உங்களை யெல்லாம் அந்த பாம்பை கடிக்க விடுகிறேன். (கண்ணை மூடிக்கொண்டு விபூதியைப் பிடித்து மந்திரஞ் சொல்லுவது.)

சிறுவர்கள்—ஓடி வந்துடுங்கடா! ஓடி வந்துடுங்கடா! சாமியார் என்னமோ மந்திரஞ் செய்யுறார். பாம்பு கடிச்சுப்புடும்.

[எல்லோரும் ஓடிவிடல். சிவநேசனும் சாதுவும் சோலைக்கு போதல்.]

மாஞ்சோலை.

சிவநேசன்—சுவாமி! தங்களுடைய கருணை நிறைந்த உள்ளத்தால் அந்த எளிய பாம்பு உயிர்பெற்றது. தாங்

கள் அதைத் தடுத்திராவிடில் நானும் சேர்ந்து கொண் டிருப்பேன்.

சாது—(சிரித்துக்கொண்டே) அப்படியா!

"மன்னுயிர் வருத்தங்கண்டும் வாழ்வதே வலிக்குமாயில்
அன்னவன் ஆண்மையாவதலி பெற்ற அழகு போலாம்"

என்ற உண்மையைக் கடைப்பிடித்துப் பிற உயிர்களுக் குற்ற துன்பத்தை நீக்கலே விரதமாகக்கொண்டு எவ்வுயி ரையுங் கொலை செய்யாதே! கொலையால் வருங்கேட்டினை பின்னல் சொல்லுகின்றேன். முதலாவதாக தெய்வத்தைப் பற்றித் தெரிந்துகொள். தெய்வமானது ஒன்றே. அஃது

" அங்கிங்கெனுதபடி யெங்கும்பிரகாசமா
யானந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
தந்தெய்வமெந் தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது
வெங்கணும் பெருவழக்காய்
யாதினும்வல்லவொரு சித்தாகியின்பமா
யென்றைக்குமுள்ள தெதுமேற்
கங்குல்பகலறநின்ற வெல்லையுளதெதுவது
கருத்திற்கிசைந்ததுவே
கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலி செய்குவாம்."

என்ற பெரியார் திருமொழிப்படி எங்கும் நிறைந்த பரம் பொருள் ஒன்றே. இரவு, பகல், பசி, பிணி, உறக்

கம், ஆதி, அந்தம், பகை, உறவு, பாவம், புண்ணியம், நாமம், கோத்திரம், ஆயுள் முதலிய யாவும் அற்றவர். எல்லா உயிர்களிடத்தும் இரக்கமும் கருணையும் உடையவர். அத்தகைய பரம்பொருளையே நமது பெரியார் சிவம் என்று போற்றிபுகழ்ந்துள்ளார்கள். வெவ்வேறு மதத்தினர் வெவ்வேறு பெயர்களால் அப்பரம்பொருளொன்றையே போற்றுகின்றனர். இந்த இரகசியத்தை நீ உணர்தல் வேண்டும். உங்கள் உபாத்தியாயர் நேற்றுக் கற்றுக் கொடுத்தத் தெய்வங்கள் யாவும் பொய்யான கற்பனைகளே. அவைகளுக்கு ஆடு கோழி பலியிடுதல் என்பதும் மூடபக்தியே. இந்தச் சிறு போலி தெய்வங்களையும் பலியிடுதலையும் அறவே மறத்தல் வேண்டும். இதனை உனக்கு உணர்த்தவே "நலிதரு சிறிய தெய்வம்" என்ற கவியை பாடினேன். நீ புத்திசாலியானதால் அதன் கருத்தையுணர்ந்து என்னை கேள்வி கேட்டனை. அப்பொழுதே உனக்கு ஞானம் பிறந்து விட்டது. நமது இந்து மதத்தில் ஏற்பட்டிருக்கும் சிறு தெய்வ வழிபாடு உன்னாலேயே ஒழிய வேண்டும். நீ பரம்பொருளாகிய ஈஸ்வரனை வழிபடுவதோடு எந்த உயிரையும் உன் உயிர்போல் பாவித்தலையே விரதமாகக் கொண்டு வாழவேண்டும்.

> "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்
> இலங்குமுயிருடலனைத்தும் ஈசன் கோயில்"

என்ற ஆன்றோர் மொழியால் எல்லா உயிர்களும் ஆண்டவன் பதியாகவும் ஆண்டவன் மயமாகவுமே யிருக்கின்றன. மேலும் ஒவ்வொரு உயிரும் தாம் தாம் செய்த பாவ புண்ணியப்படி மனிதராகவும் மற்றஜீவராசிகளாகவும் பிறக்கின்றன. நாமும் ஒரு காலத்தில் அந்த விலங்கு பிறப்புகளி

லிருந்தே புண்ணியத்தால் தற்பவம் மனிதராகப் பிறந்திருக்கலாம். இப்பிறப்பில் பாவமியற்றின் அடுத்தப் பிறவியில் அவ்விலங்குகளின் இனங்களிலேயே பிறக்கும்படி நேரும். இதனால் நமக்கும் மற்ற ஜீவராசிகளுக்கும் உறவு சம்பந்தம் உண்டு. எனவே மனிதரோ மற்றைய ஜீவராசிகளோ பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை, முதலியவைகளால் துக்கத்தை யனுபவிக்கக் கண்ட போதாயினும் கேட்ட போதாயினும், இவ்வாறு உண்டாகுமென்றறிந்த போதாயினும் நாம் மனங்கலங்கி ஐயோ பாவமே என்று நம்மை யறியாமல் கூறுகின்றோம். இதற்கே ஜீவகாருண்யம் என்று பெயர். மனிதராகப் பிறந்த ஒவ்வொரு ஜீவனும் இந்த ஜீவகாருண்ய ஒழுக்கத்தைப் பெறல் வேண்டும். இதனால் நமக்கு எந்த தீங்கு வரினும் அனுபவித்து பிறவுயிரைக் காத்தலே கடமையாகக் கொள்ளவேண்டும். ஜீவகாருண்யமின்றி புலால் புசித்தல், பலியிடுதல், முதலிய கொடிய துன்மார்க்க நெறியைப்பின் பற்றினால் நமது ஆன்மாபாவமிகுதியால் நரகமே போய் சேரும். மேலும் இந்தப் பூவுலகத்திலேயும் அறிவாளிகளாலும் ஞானிகளாலும் இகழப் படுவோம். தாயுமானார்,

> " கொல்லாவிரதங்கொண்டவரே நல்லோர்மற்
> றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே "

என்று கொல்லா விரதமுடையோரை சிறப்பித்தும் ஏனையோரை இழித்தும் கூறியுள்ளார். ஆகையால் சிவநேசா! இதோ இருக்கின்ற கவிகளையும் படித்து ஜீவகாருண்ய சிலனாகி ஈஸ்வர பக்தனாகி மேலும் மேலும் நன் ஞானம் பெற்று சன்மார்க்கனாக வாழ்வாயாக! நான் போய் வரு

கின்றேன். மறுபடியும் உன்னை சந்திக்கிறேன். (அருட்பாவைக் கொடுத்து) நீ இவ்வருட்பாவிலுள்ளக் கவிகளை வாசித்து இதன் வழி ஒழுகி உன்னால் கூடிய வரை உலருக்கும் போதித்து வாழ்வாயாக நான் சென்று வருகின்றேன்.

சிவ—(அவர் காலில் சாஷ்டாங்கமாக விழுந்து) சுவாமி தங்களை விட்டுப் பிரிய மனம் வரவில்லை. இன்று நான் புதிய பிறப்பெடுத்து விட்டேன். நான் இதுவரை படித்த படிப்பெல்லாம் விழலுக்கிறைத்த நீராய் வன்றோ முடிந்தது. அடியேனுக்கு ஞானப்பாலூட்டியத் தங்களைப் பிரிய அடியேனால் வியலாது. நானும் உடன் வருகின்றேன்.

சாது—சிவநேசா! பொறு. நீ இங்கிருந்து உன் கிராமவாசிகளுக்கும் உனது சிநேகிதர்களுக்கும் நான் கூறிய சத்திய சன்மார்க்கத்தைப் போதித்து அவர்களை நல்வழி படுத்து. மறுபடியும் உன்னை அவ[illegible] சந்திக்கின்றேன் நில். நான் போய் வருகி[illegible]. (போகிறார்).

[சிவநேசன் கண்ணுங்கண்ணீருமாய் அவரையே நோக்கி நிற்றல். அவரும் திரும்பித் திரும்பி ஆசீர்வாதம் செய்துகொண்டே செல்லல்.]

(சிவநேசன் தனக்குள்) ஆஹா! என்னே நாம் படித்த படிப்பு! மாரி, பிடாரி தெய்வமாம்! ஆடு கோழி பலி கொடுப்பதாம்! வாந்திபேதி முதலிய நோய்கள் வருவதாம்! கொலை செய்வதாம்! புலையுண்பதாம்! என்னே அறிவீனமானப் படிப்பு! இனி நான் அப்புத்தகங்களை கண்ணாலும் பாரேன்! இன்றே மறந்தேன்! இதோ! என் ஞானக் குருவளித்த ஞானவேதம்! இதிலடங்கிய கவி




தயாசாகரர் சிவநேசனுக்கு அருட்பா அளித்தல்.

ரத்தினங்களை என் அறிவை துலக்கி ஆத்மனை பரிசுத்த மாக்குவன. ஆ! என்து ஞானக்குருவை மறுபடி எப்பொழுது காண்பேனே ! ஈசா ! நீயே எனக்காறுதல் அளி! (பாடுகிறுன்.)

இராகம்—கதனகுதூகுல தாளம் ஆதி.

(ரகுவம்ஸசுதா என்ற மெட்டு)

பல்லவி.

கருணகானே கைலைவாசனே
காங்குவித்தேன் நேராய் கதிபருள் தாராய்

அநுபல்லவி.

சரணமாகியின்று சற்குணம் பயின்று
சமாசமா யன்பு சாற்றினேனே நின்று (க)

சரணம்.

விரதமேது வேறே விண்ணேரேற்றுஞ்சீரே
வேண்டினேனே கொல்லா விரதமோதும் பேரே
பரதம் போற்றுந்தர்மம் பல்லுயிர்க்குமின்பம்
பண்பினைபயக்கும் பழவினைகள் போக்கும்(கருண)

## காட்சி 3.

### வீட்டு சீன்.

[சிவநேசன் உள்ளே நுழைதல். அவன் தாயார் எல்லம்மாள் வீட்டின் பின்புறத்தில் ஒரு கோழியைப் பிடித்துக் கழுத்தை முறிக்க ஆரம்பித்தல்.]

சிவ—அம்மா! அம்மா! கழுத்தை முறிக்காதே! கழுத்தை முறிக்காதே! அதனுள் என் சகோதரன் இருக்கின்றுன்.

எல்லம்மாள்—உன் சகோதரன ? எங்கேயடா ? (கோழியைத் திருப்பித் திருப்பிப் பார்த்தல்.)

சிவ—அம்மா ! உள்ளே இருக்கின்றுன் (கோழி கூவுகிறது) அதோ பார் என்னைக் கூப்பிடுகிறுன்.

எல்லம்மாள்—ஐயோ! பையா! குழந்தா! பைத்தியம் பிடிச்சு போச்சா? இத்தனை நாளாக் கோழி மீன் அறிஞ்சா கிட்ட இருந்து பொறுக்கிப் போடுவியே இன்னைக்கு என்னமோ......(என்று பிரமைகொண்டு கேட்டல்).

சிவ—எனக்குப் பைத்தியமில்லை. அந்த சகோதரனை என்னிடம் கொடுங்கள். பிறகு சொல்லுகிறேன்.

[எல்லம்மாள் கோழியைக் கொடுத்தல்.

சிவ—(கோழியை வாங்கிக்கொண்டு) என் சகோதரா! உன்னை எமனிடத்திருந்தும் மீட்டு விட்டேன். (தாயாரைப் பார்த்து) அம்மா! இதோ இந்தக் கோழியைப் பாருங்கள்! நம்மைப்போல ஐந்து புலன்களுமிருக்கின்றன! பாவம் நம்மை பார்த்து பார்த்து மிரளுகின்றது. இதை மனம் வந்து கொல்ல நினைத்தாயே அம்மா! இனி இதுவரை செய்தது போல மாமிச வகைகளைச் சமையற் செய்ய வேண்டாம். நான் அவைகளைப் புசிக்கமாட்டேன். காய் கறிகளையே சமைக்க வேண்டும். அப்பா விடத்திலும் இந்த உண்மையைச் சொல்லி விடுங்கள். நீங்களும் இனி மாமிஸம் சாப்பிடாதிர்கள். அது புண்! புண்!!

[தகப்பனர் (மன்னர்சாமி) வருதல்.]

எல்லம்மாள்—அது என்னமோ எனக்குத் தெரியாது! கொப்பா அதோ வருகுறுங்க சொல்லிக்கோ.

மன்னர்சாமி—என்னடி! என்னடி கூச்சல் போடற.

சிவநேசன்—அப்பா! நான் இன்று ஒரு ஞான குருவை தரிசித்தேன். அவர் மாமிஸம் சாப்பிடக்கூடாதென்று சன்மார்க்கம் போதித்து (கையிலுள்ள புத்தகத்தைக் காண்பித்து) ஞான கவிகள் நிறைந்த அருட்பா எனும் புத்தகத்தைத் தந்தார். அதனல் நான் காய்கறிகளைத் தான் சாப்பிடுவேனே யொழிய மாமிஸம் சாப்பிட மாட்டேனென்று சொல்லிக் கொண்டிருக்கின்றேன்.

எல்லம்மாள்—கையிலிருந்த கோழியைக்கூட புடுங்கிக்குணு கதை பேசுறுனே !

மன்னார்சாமி—அடே ! அந்தப் பண்டாரம் எனக்குக்கூட தெரியும்ண்டா ! பிச்சை யெடுக்கிறவன் சொல்லிப் பூட்டானும் அதை நம்புருன். சீ போ கழுதை ! உடம்பு இளைத்துப் போய்டும்.

பாட்டு.

(பாரினிலே புகழ் பாரத புத்திரரே என்ற வர்ணமெட்டு.)

சிவநேசன்—ஆடு கோழி நண்டு மீனைப் புசிக்கலாமா
ஐயோ மானிடர்க்காமா
தேடரும் ஜென்மம் மறந்திடலாமா
தீயவிலங்காக மாறிடலாமா (ஆடு)

தோகைறா.

எண்ணரும் பிறவிகளில் ஊர்வனவும்
நடப்பனவும் பறப்பனவும் நீந்துவன்வும்
மண்ணுலகத் தாயவள் தன் மக்களென
மடிமீது உலவவிட்டுப் பசியாற்ற
வண்ணமுடை மரங்களொடு செடிகளையும்
வளர்த்துமிகக் காய்கனிகள் கரங்களாலே
நன்னயமா யூட்டுவபோன் றியற்கையருங்
காட்சியினை நயந்தறியா மாந்தரேரே

பாட்டு.

கரும்பிருக்க வேம்புத் தேடுங் கயவர் போலே
கண்ணற்றவர் போலே
நிரம்பக் காய்கனிகள் நிற்க முன்னுலே
நீசப் புலாலை விரும்பிப் பேய்போலே (ஆடு)

என்னுயிர் போயினும் நான் இழிந்த மாமிஸத்தை சாப்பிட மாட்டேன். நம்முடைய இயற்கையானமரக்கறி ஆகாரத்தை விட்டு மாமிஸத்தை புசிக்க வேண்டாமென்று தங்களையும் வணக்கமாய்க் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

மன்னார்சாமி—என்னடி! நிற்கிறே, வெறும் ரசஞ்சாதம் போட்டனுப்படி. தத்துவம் பேசுது.

சிவநேசன்—மிகவும் சந்தோஷம்! அதைவிட அமிர்தம் உலகில் உண்டா! என்வரையில் அதையே செய்து போட்டாலும் ஆர்வத்தோடுண்பேன்.

மன்னார்சாமி—எப்படியானுத்தொலே. (மனைவியைப்பார்த்து) நாளையிலிருந்து மீன், நண்டு கொஞ்சமா வாங்குடி.

[இருவரும் போய்விடல் சிவநேசன் ஓர் மரத்தடியில் கோழியை வைத்துக் கொண்டு தனக்குள் சிந்தித்தல்.]

ஆ! இந்த எளிய பிராணி இந்நேரம் எமனுலகு சேர்ந் திருக்குமல்லவா! எனது ஞானக் குருவின் உபதேசத்தா லன்றோ இந்த உயிரை பெரிய ஆபத்தினின்றும் மீட்கும் பாக்கியம் பெற்றேன்! பாவம்! இந்நேரம் கூவிக்கொண் டிருந்த இந்த கோழி என் கையில் அமைதியாக உட்கார்ந்து கொண்டு நிர்ப்பயமா யிருக்கின்ற காட்சியைக் காணக்காண எனக்குப் பேரானந்தமா யிருக்கின்றதே! இதன் உயிரை மீட்டப்பின் என் மனம் வறியவன் புதையலைக் கண்டதைப் போல் களிக்கின்றதே! ஆ! ஜீவகாருண்யமே! உனது பெருமையை இப்பொழுதல்லவோ உணர்ந்தேன்! இந்த ஒரு உயிரை மீட்டதற்கே இத்தகைய ஆனந்தமும் உற்சாக மும் உண்டாகுமானால் பல்லுயிரிடத்துங் கருணை காட்டு வேனாயாகில் என் ஆனந்தத்திற்கு மளவுண்டோ! நமது ஞானக்குரு எழுதிக்கொடுத்த

" கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும் "

என்ற அமுத வாக்கியம் இப்பொழுதே பலித்து விட்ட தல்லவா? சரி! இந்தக் கோழியை இங்கேயே விட்டு விடு வோம்! நமது ஞானக் குருவால் அளிக்கப்பட்ட கவிகளைப் படிப்போம். (படித்தல்)

## காட்சி 4.

### பள்ளிக்கூடம்.

உபாத்தியாயர்—அடே முருகேசா! சிவநேசன் எங்கே!

முருகேசன்—இன்னும் வரவில்லே சார்!

உபாத்தியாயர்—ஏன் வரவில்லே. எல்லாருக்கும் முன்னே வந்து விடுவானே! இன்றைக்கு என்ன நேரம்!
(ஒரு பையன் ஓடிவந்து, சார்! சார்! சிவநேசனே அவுங்க அப்பா! இழுத்து வராங்க சார்! இந்தப் பள்ளிக்கூடம் வரமாட்டேனு சொல்ருன். அதோ பாருங்க சார்! என்று காட்டுதல். உடனே உபாத்தியாயர் வெளியே வந்து பார்த்துவிட்டு நேராக அங்கு செல்லல். சிவநேசனே அவன் தகப்பனார் ஒரு கையைப் பிடித்து இழுத்து வரல்.)

உபாத்தியார்—என்ன சமாச்சாரம்! ஏன் வரமாட்டேனென்கிருன்.

மன்னார்சாமி—கழுதை! எவனே பண்டாரம் ஒருத்தன் வந்தானும்! அவன் என்னமோ புஸ்தகம் கொடுத்தானும்! அதைத் தான் வாசிப்பானும்! இந்தப் படிப்பெல்லாம் வாணும்னு சொல்ருன். கறி சாப்பிட மாட்டேண்ணுன். தொலேஞ்சு போருன் ரசம்போடுனு சொன்னேன். இப்போ இந்தப் படிப்பும் வாணும்ன்ருன்.

உபாத்தியாயர்—என்ன புத்தகம்! இப்படிக் காட்டு பார்க்கலாம்!

[சிவநேசன் புத்தகத்தை கொடுத்தல்.]

உபாத்தியாயர்—(படித்துப் பார்த்துவிட்டு) இது பண்டாரங்க பிச்சை எடுக்கிற பாட்டாச்சே. நமக்கென்ன குறைச்சல்னு இந்த சனியனேப் படிக்கணும்.

மன்னர்சாமி—சி! சனியன்! அதைக் கிழித்துப் போடு. வாத்தியாரே! 50 ஏக்கரா நஞ்சையும், 100 ஏக்கரா புன்செய்யும், கடலாட்டம் இரண்டு வீடும் வச்சுக் குனு பண்டாரப் பாட்டைப் படிக்கத் தலையிலே எழுதினனு!

சிவநேசன்—உபாத்தியாயரே! பிச்சைப் பாட்டா! உம்முடைய பாட்டுதான் பிச்சைக்கும் கொலைக்கும் குடிக்கும் ஆதாரமானது! அதில் கூறியிருக்கின்ற தெய்வங்களும் அந்தக் கொள்கையோடு கூடிய போலித் தெய்வங்கள்.

மன்னர்சாமி—பார்த்தீரா! கொர்வத்தை!

உபாத்தியாயர்—அடே! தெய்வத்தையா நிந்திக்கிறாய்! எந்தப் பண்டாரம்ண்டா கற்றுக் கொடுத்தான்!

[புத்தகத்தை கிழித்தல்.]

சிவநேசன்—ஐயா! வணக்கம்! அதைக் கிழிக்காதீர்! அந்தோ! அதில் இன்னும் படிக்க வேண்டியவைகள் இருக்கின்றனவே! என் ஞான குருவே! எங்குளாய்! பரமேசா! என் செய்வேன்! ஆ! ஈசா அருள் புரிவாயாக!

உபாத்தியார்—(கையிலுள்ள பிரம்பாலடித்து) சி! ஈசனுமில்லை பாசனுமில்லை வாடா!

சிவநேசன்—ஆ! என்னே கொடுமை! என் உயிர் போயினும் உங்கள் பள்ளிக்கூடம் வரமாட்டேன்! உங்கள் கல்வியும் போதனையும் அஞ்ஞானத்தில் வீழ்த்தும்! என்னைக் கொன்றாலும் உம்முடைய போதனையைக் கேட்க மாட்டேன்!

மன்னார்சாமி—உம்ம்ம்! என்னடா ; தலைகால் தெரியாம குதிக்கிற! வீட்டு வழி வரவிடமாட்டேன் ஜாக்கிரதை.

உபாத்தியாயர்—அடே முட்டாளே கெட்டுப் போவாய்.

"அடங்காத மானிடரை ஆட்டிவைக்
கும் மாரிமுத்து" என்று நினை!
[அடித்தல்.]

சிவநேசன்—ஈசா! அந்தோ! அப்பா! இதோ பாருங்கள் அடிகளை! உடலெல்லாம் அடித்து விட்டாரே! கண்ணீர் விடுகிறான்.

மன்னார்சாமி—சீ கழுதை! உன் முகத்தில் முழிக்க மாட்டேன். வாத்தியார் சொல்றபடி கேளு!

சிவநேசன்—(அழுது கொண்டே) அவருடைய உபதேசம் உலகுக்கும் நமக்கும் எந்தப் பயனையும் அளிக்காதே! நான் ஏன் அதை வாசிக்க வேண்டும்?

மன்னார்சாமி—வாத்தியாரே! கழுதையை விட்டு விடுங்கள்! படிக்காவிட்டால் முண்டமாக போகட்டும்.

உபாத்தியார்—ஐயோ! குடிகெட்டு விடுமே! படிப்பு மாத்திரமல்ல உங்கள் மூன்று தலைமுறையாய்க் கும்பிட்டு வரும் குல தெய்வத்தை யல்லவோ நிந்திக்கின்றான்.

மன்னார்சாமி—ஆமாம்! ஆமாம்! அடே பாவி! என் பேரை கெடுக்கப் பிறந்தாயா ( சாமியை நிந்திக்கிறாயே என்னடா!

சிவநேசன்—இல்லையே! நான் எந்த நாளிலும் தெய்வத்தை நிந்திக்க மாட்டேன்! நான் தெய்வபக்தி நிறைந்தவன்!

மன்னார்சாமி—கேட்டீரா! வாத்தியாரே! முன்னே தவறி சொல்லிவிட்டான்.

உபாத்தியாயர்—ஊம்! ஏதோ! உங்கள் குல தெய்வத்தைக் கும்பிட வருகிறானா கேளுங்கள்!

மன்னார்சாமி—ஏண்டா வருகின்றாயா ?

சிவநேசன்—ஆமா வருகின்றேன். கடவுளை நம்பினோர் கைவிடப்படார்! குல தெய்வத்தை வணங்க பின் வாங்குவேனா!

உபாத்தியாயர்—ஐயா நாய்க்கரே! புறப்படுங்கள்! நம்முடைய மாரி கோயிலுக்குப் போகலாம்!

சிவநேசன்—எங்கள் குலதெய்வம் அதல்ல !

“என்று நாம் யாவர்க்கு மிடைவோ மல்லோ
மிருநிலத்தி லெமக்கெதிரா வாருமில்லை
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோஞ்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினிற் குறைவுடையோ மல்லோமன்றே
யுறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்
பொன்றினார் தலைமாலை யணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணிய புண்ணியத் துளாமே.”

என்ற அப்பரின் அமுத மொழிப்படி எல்லாம் வல்ல இறைவனாம் பரமேஸ்வரனையன்றி மற்றைய பலி வாங்கும் மாரி பிடாரியென்ற அநாமதேய போலித் தெய்வங்களை வணங்க என் மனமும் விழையாது! சிரமுங் குனியாது! கரமுங் குவியாது! வாயுந் திறவாது! இதுவே சத்தியம்.

உபாத்தியாயர்—(இரு காதுகளையும் மூடிக்கொண்டு) ஐயோ! ஐயோ! குலதெய்வத்தைப் போலித் தெய்வமென நிந்திக்கின்றானே! ஆ மாரி!

மன்னார்சாமி—(சிவநேசனை எட்டி உதைத்து) அடே பாவி! குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக்காம்பே! நம்ப குடும்பத்துத் தலை தெய்வமாயிற்றே! அதைப் பொய் யென்றாயா! இதோ பார்! உதைக்கின்றேன்! (ஓடு

கிருர்) சிவநேசன் எழுந்து ஆ ஈசா! அடியேனைக் காத்தருள வேண்டும்!) எங்கடா ஈசன்! (மறுபடியும் உதைத்தல்)

சிவநேசன்—என் உயிரை மாய்த்தாலும் பிற உயிர்களை மாய்க்கும் உங்கள் மாரியை வணங்கேன்! தயா மூர்த்தியாகிய எம்பெருமான் ஈசனையே வணங்குவேன்!

உபாத்தியாயர்—பார்த்தீரா நாயக்கரே! அந்த பண்டாரம் செய்த வேலையை! நீங்கள் போங்கள்! இவனை நான் சரி படுத்துகின்றேன். நம்முடைய ஊரில் இனி எந்த பண்டாரமும் தலை காட்டாது பார்த்துக் கொள்ளுங்கள்.

மன்னூர்சாமி—ஆஹா! உதைத்துத் துரத்துகின்றேன். காவித்துணி கட்டிக்கினு ஒருத்தன் வருவானு! இந்த முண்டத்தை சரிப்படுத்துங்கள். (போய் விடுகிருர்.)

உபாத்தியாயர்—(சிவநேசனைக் கையால் முதுகைத் தடவிக் கொடுத்து) அப்பா! சிவநேசா! என் பேச்சைக்கேள்! மாரியைவிட ஒரு தெய்வம் உலகில் இல்லை.

சிவநேசன்—என் உயிர் போயினும் சரி, கொலைக் களமாகிய கோயிலில் வதியும் அந்த தெய்வத்தை வணங்கேன்.

உபாத்தியார்—அடே வேண்டாம்!

சிவநேசன்—வேண்டாமென்றுதான் சொல்லுகின்றேன்!

உபாத்தியாயர்—என்ன வேண்டாம்!

சிவநேசன்—உங்கள் படிப்பும் உங்கள் கொலைச் சாமியும் வேண்டாம். (உபாத்தியார் பிரம்பை யெடுத்துக் கொண்டு முதுகில் பல அடி அடித்துத் துரத்தல்.)

## காட்சி 5.

### ஒரு மரத்தின் நிழல்.

[சிவநேசன் கண்ணுங் கண்ணீருமாக
வெளியே வந்து, அந்தோ! என்
ஞானசிரியர் அளித்த புத்தகத்
தையுங்கிழித்து விட்டார்களே!
ஆ! பெருமானே!]

### விண்ணப்பம்.

" தங்கமே அனையார் கூடிய ஞான
சமாச சுத்தசன் மார்க்க
சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்சார்
திருக்கோயில் கண்டிடவும்
துங்கமே பெறும் சற்சங்கம் நீடுழி
துலங்கவும் சங்கத்தில் அடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி
ஆடவும் இச்சைகாண் எந்தாய்."

" கருணையே வடிவாய் பிறர்களுக் கடுத்த
கடுந்துயர் அச்சமாதிகளைத்
தருணம்நின் அருளால் தவிர்த்து அவர்க்கு இன்பம்
தரவும் வன்புலை கொலை இரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க
உஞற்றவும் அம்பலத்தனிலே
மருவிய புகழை வழுத்தவும் நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்."

ஆ! இன்னும் பல அரிய ஞானக் கவிகளை மனப்பாடஞ் செய்வதற்குள் பாவி கிழித்து விட்டானே! அந்தோ இனி எங்கே இந்த செல்வத்தைப் பெறுவேன்! செவிக்கு விருந்தாகவும், சிந்தைக்குப் பேரின்பமாகவும் உள்ள பரம் பொருள், விளக்கமாயிற்றே! என் செய்வேன்!

[அந்த சமயத்தில் ஒரு சந்நியாசி
வருதல்.]

"காயமே யிது பொய்யடா;
காற்றடைந்த பையடா;
மாயனுர் குயவன் செய்த
மண்ணுபாண்டமோடடா!"
அரகரா! சிவசிவா! மஹாதேவ்.

[சிவநேசன் திரும்பிப் பார்த்தல்.]

சந்நியாசி—தம்பி! இந்த ஊரில் யாராவது தர்மத்திற்கு அன்ன மளிப்பார்களா ?

சிவநேசன்—(திடீரென்றெழுந்து அவர் பாதத்தில் நமஸ்கரித்து) சுவாமி தாங்கள் இவ்வூரில் வரவேண்டாம்! அயலூருக்குப் போய் விடுங்கள். இங்கே சந்நியாசிகள் என்ருல் கொலை செய்து விடுவார்கள். உங்களைப் போன்ற ஒரு சாது எனக்கு ஞானுபதேசஞ் செய்தார். அவர் போதித்த சன்மார்க்க வழியில் நடந்ததற்காக அவரால் அளிக்கப்பட்ட அருட்பா நூலையுங் கிழித்து என்னையும் அடித்து விட்டார்கள்! ஆகையால் அறிவற்றப் பிடிவாதக்காரர்கள்.........(என்ற பொழுதே நாலைந்து பேர் ஓடி வருதல்)

ஒருவன்—அடே! இதோ பண்டாரம்! இதோ பிச்சைக்காரன் இவன்தாண்டா நம்ப நாயக்கர் பிள்ளையை கெடுத்தவன். வாங்கடா.

மற்ருெருவன்—ஆமாண்டா மதுரைவீரா ஓடியாடா

[எல்லாருங் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடிவரல்.]

சிவநேசன்—ஐயோ! இவரல்லவே! இவரல்லவே!

[ஒருவன் ஓடிவந்து சாதுவை அடித்து ஊரை விட்டுப் போடா என்று தள்ளல். மற்ருெருவன் அடே பண்டாரம் இந்த ஊருக்குள்ளே வராதே ஓடு என்றல்.]

சிவநேசன்—அப்பா! இவரை அடிக்காதீர்கள்! அடிக்காதீர்கள்! பாவம்! (சாது ஓடல். பலர் துரத்தல். சாது ஓடியே விடல்)

மற்றவர்கள்—வாங்கடா போகலாம்! ஒழிஞ்சான் சாமி!

ஒருவன்—சிவநேசா எண்டா கெட்டுப் போற! நம்ப பழய வழக்கத்தை விட்டு பண்டார வேலையும் பிச்சை யெடுக்கிற வேலையும் எண்டா!

சிவநேசன்—ஆ! ஈசா! என்னால் சாதுக்கள் ஹிம்சை படலாயிற்றே! என்னே கொடுமை! இனி இவ்விடத்தில் இருக்கப்படாது. அப்பாவோ கோபமாக இருக்கின்றார். வீட்டுக்குப் போனாலும் அடிப்பார். குளத்தங் கரை மரத்தடியில் போய் நித்திரை செய்வோம். பசியோ வயிற்றைக் கிள்ளுகின்றது. பார்க்கலாம்.

[போய்விடல்.]

## அங்கம் 2.

### காட்சி 1.

---

ரோட்டு மார்க்கம்.

(அடிப்பட்ட சாது அவ்வூரைவிட்டு ஒரு சாலை ஓரம் போய்க் கொண்டிருத்தல். மற்றொரு சாது இவரை சந்தித்தல்.)

தயாசாகரர்—(சிவநேசனுக்கு உபதேசித்தவர்) சிவ! சிவா! சுவாமிகள் எங்கிருந்து வருகின்றீரே?

பண்டாரம்—சுவாமி! அடியேன் எழவெடுத்த ஊனுகிகுப் பம் சென்று ஏங்கித் தேங்கி வருகின்றேன் (முதுகைக் காட்டி) இதோ பாருங்கள்.

தயாசாகரர்:—ஆஹா! பரமேஸ்வரா! என்னே! என்னே; யார் செய்த கொடுமை!

பண்டாரம்—அந்தப் பாழான ஊரில் பசியாற்றிக் கொள்ளலாமெனச் சென்றேன். அங்கு அறிவும் அன்பும் நிறைந்த ஒரு சிறுவனைக் கண்டேன். அவன் மகா சிவபக்தன். அடியேனைக் கண்டதும் நமஸ்கரித்து சுவாமி! இந்த ஊரில் தங்காதீர்கள். பக்கத்து ஊருக்குச் சென்றுவிடுங்கள்! இந்த ஊரில் சாதுக்கள் வந்தால் அடித்துவிடுவார்கள். எனக்கு ஒரு சாது குருவாகவமைந்து சன்மார்க்க போதனை செய்து ஒரு புத்தகத்தையுங் கொடுத்தருளினர். அதனைக் கடைபிடித்தொழுகியதால் என்னையும் அடித்து பெரியாரால் அளித்த புத்தகத்தையும் கிழித்து நாசஞ் செய்திருக்கின்றார்கள். ஆகையால் தங்களைப்போன்ற சந்நியாசிகள் வந்தால் உரைவிட்டுத் துரத்துவதென்றுங் கங்கணங் கட்டிக் கொண்டுள்ளார்கள் என்று மிக துக்கத்தோடு உரைத்துக்கொண்டிருக்கும்போதே இரண்டு மூன்றுபேர் ஓடிவந்து என்னை அடித்துத் துரத்திவிட்டார்கள். அந்த ஏக்கத்தோடும் பசியோடும் பரமசிவமே யென்று போய்க் கொண்டிருக்கின்றேன்.

தயாசாகரர்—அந்தோ! பாவம்! சுவாமி! தாங்கள் பசியினால் களைத்து இருக்கின்றமையால் இங்கேயே இருங்கள். அதோ தெரிகின்ற ஊருக்குச் சென்று தங்களுக்குப் போஜனம் அனுப்புகின்றேன்.

பண்டாரம்—சுவாமி! வேண்டாம்! வேண்டாம்! நான் அந்த கிராமத்திற்கு மெதுவாகச் சென்று விடுகின்றேன். தாங்கள் எனக்காக சிரமப்படவேண்டாம்.

தயாசாகரர்—சுவாமி! (ஒரு வழியைக் காட்டி) இந்த வழி யே நெடுக செல்லுங்கள். அந்த ஊரார் அன்புடன் உபசரிப்பார்கள்.

பண்டாரம்—அப்படியே சுவாமி! நமஸ்காரம் போய்வரு கிறேன். (போதல்.)

(தயாசாகரர் மனதிற்குள்) ஆஹா! நமது அறமொழி களை திடமாக் சிவநேசன் கடைபிடித்து ஒழுகுகின்றான் போலும்! ஆதலால் அஞ்ஞான உபாத்தியாயரால் பல இன்னல்கள் விளைவிக்கப்பட்டு புத்தகத்தையும் கிழிக்கப் பட்டதாக தெரிகிறது. இருக்கட்டும்சிவநேசா! அஞ்சாதே! நான் வருகின்றேன். உன்னுடைய உறுதியான நெறியைக் காக்க என்னுயிரைக் கொடுக்கின்றேன். பாவம்! தற்சமயம் புத்தகமின்றி அலையும் சிவநேசனுக்கு வேறு புத்தகம் கொடுத்துதவி மேலும் மேலும் சன் மார்க்கத்தில் ஈடுபடச் செய்து உண்மை வழியைக் காட்ட உடனே முயலல் நலம். இவ் வேடத்தைக் களைந்து மாறு வேடம் புனைந்து செல்லல் வேண்டும். போவோம்.

(போய்விடுதல்)

## காட்சி 2.

### பூசாரி வீடு.

மாரியப்பன்—தம்பி! முனியாண்டி! கந்தப்ப பூசாரியும்! சப் பாணி பூசாரியும் வந்தார்களா!

முனியாண்டி—இப்பதான் வந்தாங்க அண்ணன். எங்கே யோ போய்விட்டாங்களே!

(இருவரும் வருதல்.)

மாரியப்பன்—இதோ வந்துட்டாங்கடா பாயை யெடுத்துவா!

(அருகில் இருவரும் வருதல்.)

மாரியப்பன்—வாங்கண்ணன்! வாப்பா கந்தப்பா!

இருவரும்—வருகிறோம்! வருகிறோம்!

மாரியப்பன்—(பாயைப்போட்டு) இப்படி உட்காருங்கள்.

(இருவரும் உட்காரல்.)

சப்பாணி—அப்பா மாரி! எங்களை அழைத்த காரணம் என்ன!

மாரியப்பப் பூசாரி—இந்த ஊர் கிராமதேவதையின் மகிமை தங்களுக்குத் தெரியும். தஞ்சாவூர், மதராஸ், இப்படி மேற்கே பங்களூரு முதலியவிடங்களில் இருந்து பிரார்த்தனைகாரு வருவாங்க! இந்த சாமியை, பொய்ச் சாமி யென்றும், அதை வணங்குவது பாவம் என்றும் அதுங்குளுக்கு ஆடு, கோழி அறுக்கக்கூடாதுணும் ஒரு பண்டாரம் எங்க ஊர் நாய்க்கர் பிள்ளைக்கு உபதேசஞ் செய்துவிட்டான். அந்தப் பையன் நம்ம சாமியை கேவலமா பேசறான். இந்தமாதிரி அந்த பையன் பேசி எல்லாரையும் தன்வசமாக்கிக் கொண்டா இந்தப் பக்கத்தில் எல்லா சாமிக்கும் கௌரவம் கெட்டுப்போகும்! இதற்கு என்ன செய்வது!

சப்பாணி—நாய்க்கருன்னு! மன்னார்சாமிநாய்க்கர் பிள்ளையா!

மாரியப்பன்—ஆமாம்!

சப்பாணி—அடடா! குடி கெட்டுப்போகுமே! பையன் பேச்சை நாயக்கர் எடுத்துக்கிறாரா!

மாரியப்பன்—இதுவரையில்லே. இனிமேல் என்னமோ! மேலும் அந்தப்பையன் மாமிஸம் சாப்பிடமாட்டேன்னுன்! அதுக்கு நாய்க்கர் ஒப்புக்குறாரு! இரண்டாவது நம்ம பாடத்தை படிக்கமாட்டேனுன், அதையும்

ஒப்புக்குன்றாரு! இந்த மாரியை கும்பிடமாட்டேன் னான்! அதற்கு மாத்திரம் ஒப்புக்கொள்ளவில்லே.

சப்பாணி—சரி! சரி! சாமி விஷயத்தில் நாய்க்கருக்கு பக்தி யிருக்குது! இன்னும் பயமும் உண்டாக்கி விடனும்! அப்படி செய்தா பிள்ளே பேச்சை கேட் கவே மாட்டார்.

மாரியப்பன்—அதுக்கு என்ன செய்யுறது!

சப்பாணி—இது தெரியாதா? பூசாரிக்கு பூசாரியாகவும் இருக்கிற, வாத்தியாருக்கு வாத்தியாராகவும் இருக் கிற, மேலும் பேர் பெற்ற சடையப்ப பூசாரி பேரனுவு மிருக்கிற! ஒண்ணுந் தெரியலன்றய.

மாரியப்பன்—ஒருவழியுந் தெரியாததனுல் தான் உங்களே வர வழைச்சுது! (கந்தப் பூசாரியைக் காட்டி) இவ ரும் நம்ம ஜமீன்தார் கோயில் பூசாரியாரல்லவா?

கந்தப்ப பூசாரி—நான் என்ன ஐயாவுக்கு மேலயா! நாங்க ளிருவரும் ஜமீன்தார் வீட்டில்கூட ஒரு வேலே செய் திருக்கிறம்! அது எப்படியாகுதோ

சப்பாணி—மாரி! அப்படியான நாய்க்கருக்குக் கால்நடை நஷ்டம் உண்டாக்கனும்! அதற்காக நான் ஒரு பச்சிலே தறேன்! அதை கொண்டு போய் அவருடைய வண்டி எருதுகளில் ஒண்ணுத்துக்கு புல்லில் கலந்து கொடுத்துடு. மறுநாள் இரண்டொருதரம் கழிஞ்சபின் செத்துபூடும். அப்புறம் ஊரில் ஏதாகிலும் சப்பை சாடுகள் இருந்தால் அவைகளுக்கும் தினம் இரண்டு மூன்று மாடுகளுக்குக் கொடுத்துச் சாக அடிச்சா ஊரார் அம்மனே வரங்கேட்க வருவாங்க! அப்

பொழுது நமது வேலையைக் காட்டி நாயக்கரை மயக்கி தேவதையின் உண்மை பக்தனுக்கு பயத்தை உண்டாக்கி விடலாம்.

மாரியப்பன்—ஐயோ பாவம்! 300 ரூபாய் கொடுத்து இப் பொழுது தானே ஒரு ஜதை பிடித்து வந்தார்.

சப்பாணி—அப்படியானல் வந்ததைபடு! அவ்வளவு நஷ் டத்தை உண்டாக்காவிட்டால் நம்ப காரியம் ஒண்ணும் பலிக்காது! (கந்தபூசாரியைக் காட்டி) இந்த ஆசாமி யைக் கேளு! மலையனூருக்குப் பக்கத்தில் என்ன நடந்ததுன்னு!

மாரியப்பன்—நீங்களே சொல்லுங்க!

சப்பாணி—மலையனூருக்கு மாசி திருவிழாவுக்கு சிலம்பு, பம்பை முதலிய நம்ப பிழைப்புச் சாமானை எடுத்துக் குனு கோயிலை சுற்றி வந்தோம்! அந்த சமயத்தில் சிலபேர்நல்ல ஜுரத்தோடு இருக்கிற ஒரு பெம்பளேய அழைச்சுக்குனு கோயில் எதிரில் வந்து நின்றுங்க! அந்த அம்மா புருஷன் என்னை பார்த்துட்டான்! ஐயோ! சாமிகூட இதோ இருக்கிறரே! இவரை கேட்டா தெரிஞ்சி பூடுதுனு சொன்னன். உடனே அவரை என்ன சமாச்சாரம்னு கேட்டேன்! என் சம்ஸாரம் ரம்ப நாளா நோவா கடக்குதுனு சொன் னன். அவ்வளவு தான்! உடனே என்மேல் ஆவே சம் வந்ததைப் போல் ஆடினேன்! அடே இவள் பிழைக்க மாட்டா! எட்டு நாளையில் எமலோகம் போய் விடுவாடானு சொல்லிட்டன். நானே கொஞ் சம் தண்ணி போட்டுக்குனு இருந்தன். அந்த கலாட் டாவில் கண்டபடியே உளறி விட்டன். என்ன செய்

யுறது! என்பேர் கெட்டுப் போகாமலிருக்க எட்டாம் நாள் வேறொரு ஆளைப்பிடிச்சு வைத்தியனைப் போலப் போய் அந்த அம்மாளுக்கு விஷத்தைக் கொடுத்துட்டு வந்துடா சொன்னேன்! அன்று இராத்திரி 10-மணிக்கு அம்மா பைசல்! நமக்கு தெரிந்த வந்தான்! குழந்தைகூட இரண்டு இருக்குது! என்ன செய்யுறது! நம்மபேரில் இருக்கிற நம்பிக்கை போய்டுமே! அதுக்கு இந்த வேலே செய்தன். இன்னொன்னு நம்ம ஜாதியான் செய்ததைக் கேளு. * மதுராந்தகம் தாலுக்கா மின்னல் சித்தாமூர்ல கோணே பூசாரி மேல தெய்வம் வந்து ஆடிச்சி. அப்போ அந்த ஊர் மாணிக்கக் கவுண்டன் ஓடிவந்து கையில் என்னமோ மறச்சிவச்சிக்குனு இது என்ன சொல்லுனு தெய்வத்தைக் கேட்டான். அவ்வளவு தான்! கோணே பூசாரி தன் கையில வச்சிருந்த சூலத்தாலே கவுண்டன் கண்ணே குத்திட்டான். யார் கேட்டான். தெய்வம் ரொம்ப கோவுச்சிக்கிச்சினு சொல்லி பயந்துட்டாங்க. ஆனு ரொம்ப ஜாக்கிரதையா செய்யணும்.

கந்த பூசாரி—இதுஎன்ன! * தெற்கே உடுமலே பேட்டை தாலுக்கா சோமவாரம்பட்டி கிராமத்தில் 31-1-32ல் மாரியம்மன் உற்சவத்தை ஊரார் பலிகொடுக்கக் கூடாதுனு நிறுத்தி விட்டான்க. அதுக்காக அந்த ஊர் முத்துசாமி பூசாரி கோவத்தினுல் தன் பிள்ளையையே கொண்டுபோய் அம்மனுக்கு பலி கொடுத்துட்டான்.

மாரியப்பன்—ஆ! ஐயையோ! அப்புறம்.

கந்த பூசாரி—அப்புறம் போலிஸார் புடிச்சிக்கினு போய் பூசாரியை தூக்கு போட்டுட்டாங்க. இன்னொருத் தன்

கதையை கேளு. * கடலூர் இருக்குதே அதும் பக்கத்தில் ஒரு கிராமத்தில் வாந்திபேதி வந்துடுத்து. ஊராரு அம்மன் கோயிலில் வந்து பூஜை போட்டாங்க. அப்போ பூசாரி ஆவேச மாடி நரபலி கேட்டான். ஊராரு நரபலி கொடுக்க முடியாது வீட்டுக்கு ஒரு ஆடு தரம்னு சொன்னுங்க. முட்டாள் பையன் அதைக் கேட்காம ஒரு பொம்புள கையில் இருந்த 6 மாதத்துக் குழந்தையை பிடுங்கி கழுத்தை முறிச்சிப்புட்டான்.

மாரியப்பன்—(கண்ணை மூடிக்கொண்டு) அப்பப்பா! என்ன கோரம்.

சப்பாணி—உடனே ஆளைப் பிடிச்சிக்குனு போய்ட்டாங்க. கூடலூர் செஷன் கோர்ட்டில் விசாரிச்சாங்க. ஊராரு கூட தெய்வந்தான் வந்து கொன்றதே ஒழிய அவன் கொல்லலனு சாட்சி சொன்னுங்க. ஜூரிங்ககூட பூசாரி மருளாடி மயக்கத்தால் செய்துட்டானு சொன்னுங்க. இங்கிலீஷ் ஜட்ஜ் என்ன செய்தார் தெரியுமா? தெய்வமா யிருந்தா இருக்கட்டும். நரபலி கேட்கிற தெய்வம் நம்ம நாட்டில் கூடாது. அதை வச்சிருந்தா இன்னும் எத்தனை நரபலி கேட்குமோ? ஆகையால் இப்பவே தூக்கில போடுங்கனு சொல்லி விட்டான். ஆகையால் நாம் ஒருத்தருக்கும் உயிர்ச் சேதம் செய்யக்கூடாது. எப்படியானு பயங்காட்டலாம்! ஆட்டை மாட்டை கொன்று நம்ப வசியப் படுத்திக்கலாம்.

மாரியப்பன்—அப்பப்பா! நம்ம பிழைப்பு ஏமாத்தினு தான் முடியும் போல யிருக்கிறது! அப்படியானு

---

* இவைகள் உண்மையாகவே நடந்தன.

உங்க இஷ்டப்படியே செய்யுங்கள். இராத்திரி மாட்டுக்கு மருந்து கொடுத்துடறன்.

சப்பாணி—சரி வாங்க போகலாம்! இது நடக்கட்டும். அப்புறம் பார்க்கலாம்!

[எல்லோரும் போதல்.]

## காட்சி 3.

### குளத்தங்கரை மரத்தின் நிழல்.

(தோளில் தாங்கிய கொம்பில் ஒரு மூட்டையும், சொம்பும் தொங்கவிட்டுத் தலையில் பெரியதலைப்பாகையும் அதைச் சுற்றி தாயத்திகளும் மணிகளும் கட்டப்பட்டு, புஜத்தில் தாயத்திகளும் கடகங்களும் கட்டிக்கொண்டு விபூதி நிறைய பூசிக்கொண்டு இரண்டு தோள்களிலும் துணிகளோடு கூடிய ஜெகன்னாத சந்நியாசி வருதல்.)

சந்நியாசி—ஜெகன்னாதம்! ஜெகன்னாதம்! ஜெகன்னாதகுரு! சங்கரா! ஜெகன்னாதகுரு! ஜெகன்னாதகுரு!

சிவநேசன்—(தனக்குள்) ஆ! யென்செய்வேன். பசியோ பொறுக்க முடியவில்லையே. பாவிகள் அடித்த அடியும் நோகின்றதே. (திரும்பல்)

சந்நியாசி—ஜெகன்னாதம்! ஜெகன்னாதம்! (என்று கூறி உட்காரல்.)

சிவநேசன்—ஊருக்குள்ளே போம். இங்கே ஏன் உட்கார்ருகின்றீர்! என்னோடு பேசினல் உம்மை அடித்து விடுவார்கள்.

சந்நியாசி—தம்பி! எனக்கொரு புஸ்தகம் ரோட்டில் கிடைத்தது அது என்னவென்று படித்து சொல்லுறீங்களா.

சிவநேசன்—எதோ! காண்பியுங்கள்.

[சந்நியாசிகொடுத்தல். சிவநேசன் பிரித்துப் படித்தல்.]

சிவநேசன்—ஆஹா! நம் குருவால் அளிக்கப்பட்ட புத்தகம் போன்றதே! ஆ! பரமேஸ்வரன் அடியேனின் ஆற்றெரு அருந்துயரைக் கண்டு இந்த புத்தகத்தை அனுப்பியுள்ளான்போலும்! நடுக்கடலில் கலங்கவிழ்ந்தவனைப் போலலேயும், எனக்கு ஒரு தெப்பமுங் கிடைத்ததல்லவா! ஆ! இறைவா! உன் திருவிளையாடல்தானென்னே! பசியும் பகலவனைக்கண்ட பனி போல் பறந்துவிட்டதே. (சன்னியாசியைப்பார்த்து) ஐயா! இந்தப் புத்தகம் தங்களுக்கு அவசியம் வேண்டுமா!

சந்நியாசி—தம்பி! எனக்கு ஏன் அது! தாங்களே எடுத்துக் கொள்ளுங்கள்! எனக்கும் ரோட்டில் அகப்பட்டது தானே!

சிவநேசன்—ஐயா! அநேகவணக்கம்! இதற்காக தங்களுக்கு என்ன கைம்மாறு செய்வேன்;

சந்நியாசி—ஜெகன்னாதகுரு! அவர் கடாக்ஷம் இருந்தால் போதும்! தெய்வபலம், குருபலம் இருக்கிறது; தம்பிக்கு குருபலம் பலமாயிருக்கிறது! ஜெகன்னாதக் குரு! நான் போய்வருகின்றேன்.

சிவநேசன்-போய் வாருங்கள். யார் யாரோ வருகின்றார்கள்.

(சந்நியாசி போதல்.)

## காட்சி 4.

### மன்னார்சாமி வீடு.

(மன்னார்சாமி வருத்தத்தோடு வீட்டில் ஒரு சின்ன திண்ணையின்பேரில் உட்கார்ந்திருத்தல். அவன் மனைவி எல்லம்மாள் வருதல்.)

எல்லம்மாள்—பையன் எங்கே!

மன்னார்சாமி—பையனா செத்தான்! உனக்கு பிள்ளை ஒரு கேடா! நீ பெற்ற பிள்ளை எது சரியாயிருக்கிறது. மூன்று பெற்றாய். மூன்றும் மூன்று வழி! ஒன்று உனக்கு விரோதம், மற்றொன்று எனக்கு விரோதம்; மூன்றாவது தெய்வத்துக்கே விரோதம்! இந்தமாதிரி பிள்ளைங்க இருந்தாயென்ன செத்தா யென்ன!

எல்லம்மாள்—அதுக்கு நாம் என்ன செய்யலாம்! அதது வந்த கூத்தை அதது ஆடிவிட்டுத்தானே போகும்! சின்ன பையன் எங்கே!

மன்னார்சாமி—மறுபடியும் ஏன் அவனை கேழ்க்கிற! செத்தாலும் தலே மூழ்கிவிட்டு சுகமாயிருக்கலாம்! மாமிசம் சாப்பிட மாட்டேன்னான் விட்டுட்டம், இந்த ஊர் படிப்பு வாணும்னு ஓழிஞ்சிபோறான் ஏர் விழட்டும் னன். இப்ப நம்ம குலதெய்வத்தைக் கும்பிடமாட்டானும்!

எல்லம்மாள்—அப்படி சொல்ல மாட்டான்! அவன் எங்க! நான் போய் கூப்பிட்டு வாரேன்! இன்னும் சாப்பிட கூட இல்லையே.

மன்னார்சாமி—அந்தக் கழுதையை கோபத்தில் அடிச்சி விட்டன், அது எங்கே போச்சோ.

எல்லம்மாள்—ஐயோ! என் வயிறு எரியுதே! அவனையேன் அடிக்கணும் அட அப்பா எங்கே யிருக்கிறாய். பாவி பண்டாரம் அவனுக்கு சூன்யம வசசுட்டானே (ஓடல்).

## காட்சி 5.

[குளத்தங்கரை மரத்தடியில் சிவநேசன் அயர்ந்து நித்திரை செய்தல். எல்லம்மாள் அவனைப் பார்த்துவிட்டு ஆத்திரமாக ஓடி அப்பா! குழந்த எழுந்திரு என்று கூறி எழுப்பல்.]

சிவநேசன்—(தாயை அணைத்துக் கட்டிக்கொண்டு) அம்மா; என் முதுகெல்லாம் பாருங்கள்! கன்னத்தைப் பாருங்கள் (என்று அழுதுகொண்டே காட்டல்).

எல்லம்மாள்—(துக்கத்தோடு) என் செல்வமே யார் அடித்ததுடா! என் கண்ணே! பெற்றவயிறு எரியுதே! ஐயோ! சூடுசூடாக எழும்பி விட்டதே (அழுது கண்ணிரைத் துடைத்துக்கொண்டு பையனைக் கட்டிக்கொண்டு) உடம்பெல்லாம் சிவந்து ரத்தங் கட்டிக்கொண்டதே! யார் அடித்தாங்கடா!

சிவநேசன்—உபாத்தியாயர் பிரம்பால் அடித்தார்! அப்பா கன்னத்தில் அறைந்து உதைத்தார்!

எல்லம்மாள்—வாத்தியாரா அடிச்சான்! குடிச்சிப்புட்டு வந்துட்டானு! பாவி! வா! அந்த கழுதையை நான் கேட்கிறேன்!

[பையனை வீதியே அழைத்துக்கொண்டு போதல்.]

வழியில் சிலர்—என்ன! என்ன! பையனை யார் அடித்தது.

எல்லம்மாள்—எல்லாரும் பையனை பாருங்கள்! வாத்தியார் அடிச்சானும்! அவன் படிப்பில கொள்ளிவக்க! எங்க ஊரில் வந்து பாருங்க படிப்ப! மூன்றுவதாம்

நாலாவதாம்! மூணு வாத்தியார். பாட்டு மென்ன! கதை யென்ன! ஆட்டம் மென்ன! கூத்து என்ன! க்ராகிதத்தில் பொம்ம போடுறது! பாய் பின்றது! கப்பல் செய்யுறது. பொம்மனுட்டி பசங்க நால் பின்றது! இன்னும் என்னென்னமோ கத்துதராங்க! பசங்களுக்கு ஒரு அடியில்ல! இவன் என்னமோ காத்தவராயன் கதையாம், மதுரைவிரன் கதையாம், பேய் கதை, பிசாசு கதையாம்; பொட்டச்சிகூட துப்ப மாட்டா இவன் படிப்ப! எலும்பை முறிச்சி வச்சிருக்கிருன் பாருங்கய்ய! கோயில் பூசாரினு நினைச்சுகுணு இருக்கிருணு!

வழிபோக்கர்கள்—ஐயையோ! உங்கள் பிள்ளையையா இப்படி அடிச்சி இருக்கிருன் உங்கள் பிள்ளை கெட்டிக்காரனுச்சே! பூசாரி என் அடிச்சான்! நாய்க்கர் இல்லையா!

எல்லம்மாள்—இருக்கிருரு! விட்டுக்கு தான் அழைச்சும் போறேன்.

சிவநேசன்—அம்மா! அப்பா இருப்பாங்க!

எல்லம்மாள்—என் செல்வமே! பயப்படாதே! இனிமேல் அப்பா அடிக்கமாட்டாங்க! அப்பா விட்டில்கூட இல்லே. சாப்பிட்டுவிட்டு எல்லாம் விசாரிக்கிறேன் வா!

சிவநேசன்—சரிதான்! எனக்குகூட பசிக்கிறதம்மா! அதனுல் தான் தூங்கிவிட்டேன்.

எல்லம்மாள்—ஐயோ! என் கண்ணே! வா போகலாம். பாவி வாத்தியாரு (அழுதல்.)

(இருவரும் போதல்.)

# அங்கம் 3.

## காட்சி 1.

(மேட்டூர் ஜமீன்தாரர் அரண்மனை.)

(அரண்மனையின் பின்புறத்து நந்தவனத்தில் ராதாவும் செண்பகமும் சம்பாஷித்தல்)

ராதா—ஆ! செண்பகம்! செண்பகம்!

சேண்பகம்—(செண்பகம் ஓடிவந்து) அம்மா! ஏன் கூப்பிட்டீர்கள்.

ராதா—உன்னைக் கூப்பிடவில்லையே! மலர்ந்திருக்கின்ற செண்பக புஷ்பத்தைக் கண்டு (புன் சிரிப்போடு) ஆச்சரியப்பட்டேன்.

சேண்பகம்—நல்லவேடிக்கை! வேண்டுமென்றே பரிகசிக்கின்றீர்கள்! உங்கள் பெயரால் ஒரு புஷ்பம் இருக்கப்படாதா? நான் பரிகாசஞ் செய்வேனே !

ராதா—(திடீரென்று) செண்பகம்! ஆ! என்மனம் எங்கேயோ சென்றுவிட்டதே! அதோ பார் கீரிப்பிள்ளைகளை!

சேண்பகம்—(உற்றுப் பார்த்து) அம்மா! இந்த காட்சி தங்களுக்கு வருத்தத்தைத் தான் உண்டாக்கும்! எல்லா உயிர்களிலும் தாயுக்கும் குழந்தைக்கும் ஒரேவிதமான அன்புதானு! தாயோடு குட்டிகள் தாவித்தாவி விளையாடுவதும், தாய் குட்டிகளைத் தழுவித்தழுவிக் கவ்வுவதையுங் காணக்காண எவர்மனந்தான் மகிழ்ச்சியடையாது !

ராதா—செண்பகம்! ஊமைப் பிராணிகளாயுள்ள ஜீவராசிகளெல்லாம் தங்கள் தங்கள் குட்டிகளோடு குலாவி மகிழ்கின்றனவென்றால் மானிட ஜென்மமெடுத்த

எனக்கொரு குழந்தை பிறந்திருந்தால்.............
(வருந்துகின்றாள்.)

சேண்பகம்—(கண்ணைத் துடைத்து) வருந்தாதேயம்மா! வருந்தாதே! குழந்தை பிறக்காமலே போய்விடுமா! கலியாணமாகி ஐந்து வருஷங்கள்தானே ஆயிற்று! நம்முடை கிராமதேவதை கமலக்கண்ணி அம்மாள் கண்ணை திறந்தால் கணக்கற்ற மகப்பேறுகளை அடையலாம். (சற்று தியங்கி) அம்மா கார் சப்தங் கேட்கிறது! ஐயா வந்துவிட்டார்போலிருக்கிறது! வாருங்கள் போகலாம்! வருந்தாதீர்கள்! அம்பாள் பரமேஸ்வரி நம்மை மறக்கமாட்டாள்.

[இருவரும் போய்விடுதல்.]

## காட்சி 2.

### அந்தபுரம்.

கேசவராஜ்—ராதா! நான் நாளையதினம் வேட்டைக்குச் செல்லவேண்டும்! காலை 6-மணிக்குச் சென்றால் மாலை 3-மணிக்குதான் வருவேன்! அதுவரை என் தயாருடனும் தோழிகளுடனும் சந்தோஷமாக விளையாடிக் கொண்டிரு.

ராதா—நாதா! நான் எவ்வாறு தங்களை விட்டுப் பிரிந்திருப்பேன்! என் மாமியோ சதா வருத்தத்தில் ஆழ்ந்திருக்கின்றார்கள். அவர்களோடு நான் எவ்வாறு சந்தோஷிப்பது!

ஜமீன்தாரர்—அம்மாளுக்கு என்ன வருத்தம்!

ராதா—வருத்தமா !

" தொக்கிள மலர் துதைவிலாத சோலையும்
புக்கிளந்தாமரை நகாத பொய்கையும்
மிக்கிளம்பிறை விசும்பிலாத வந்தியும்
மக்களையிலாததோர் மனையுமொக்குமே "

சூளாமணி.

என்றபடி நம்முடைய ஜமீனை ஆளுவதற்கு இதுவரை ஒரு புத்திர சந்தானமும் உண்டாகவில்லையே யென்ற கவலை சதா என் மாமியை வருத்துகின்றது! புண்ணில் வேல் நுழைந்தாற்போல என்றுமில்லாது திடீரென்று நம்முடைய வீட்டில் கொள்ளைக்காரர்கள் புகுந்து அரிய நவரத்தினங்களைக் கொள்ளை கொண்டுபோய் விட்டதொருபுறமும் வாட்டுகின்றது! அவர்களோடு நான் எவ்வாறு சந்தோஷிப்பது! "மக்களை யிலாதவர் மரத்தோடொப்பர்" என்ற பழமொழிப்படி எனக்கு சந்தோஷமும் ஒரு கேடா!

ஜமீன்தாரர்—(சிரித்துக்கொண்டே) பேதாய்! இதற்காக வருந்துவதா!

" நதியின் பிழையன்று நறும்புனலின் மையற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழையன்று மகன்பிழை யன்றுமைந்த
விதியின்பிழை நீயிதற்கென்னை வெகுண்டதென்றான்."

இராமர் வனத்திற்கேகும்போது கோபாக்கினி கொண்ட லக்ஷ்மணனைப் பார்த்து, அப்பா தம்பி! ஆற்றில் வெள்ளம் வராதது ஆற்றின் குற்றமல்ல. அதுபோல நம்முடைய வனவாசமும் நம் தந்தையின் குற்றமல்ல! தாயாகிய கைகேயின் குற்றமல்ல! பரதனின் குற்றமல்ல நம்முடைய பழைய வினையின் குற்றம்! இதற்காக ஏன் கோபிக்கவேண்டும்

என்று ஆறுதல் கூறியதாகக் கம்பர் கூறும் கவி எனக்கு இப்பொழுது ஞாபகம் வருகிறது! எல்லாம் நாம் பூர்வத்தில் செய்த பாக்கியா பாக்கியத்தின்படி புத்ரோற்பத்தியும், சிறப்பும் உண்டாகுமேயன்றி நம்மால் என்னசெய்ய முடியும்! இதற்காக வருந்திதான் யென்ன பயன்? திருடர்களைக் கண்டு பிடிக்கவும் போலிஸார் பெரு முயற்சி யெடுத்துள்ளார்கள்.

ராதாபாய்—அரசே! தாங்கள் என்னை அற்பமாக நினையாதிருக்கும் பக்ஷத்தில் என் மனதிலுள்ளதை வெளியிடுகின்றேன். இல்லையேல் நான் வாளாயிருந்து விடுகின்றேன்.

ஜமீன்தாரர்—(அவளைக்கட்டித்தழுவி) என் இனிய உயிரே! உன்னுடைய அமுத மொழியை நான் குறை கூறுவேனே! என்றைக்காகிலும் அவ்வாறுநடந்ததுண்டா!

ராதாபாய்—(சொக்கியவளாய் அன்போடு அசைந்து) காதலா! நேற்றையதினம் என் கனவில் ஒரு அழகிய பெண் விரித்த கூந்தலோடும் மஞ்சளுடையோடும் சூரிய உதயம் போன்ற குங்கும பொட்டோடும் தோன்றி, அம்மா; ராதா! உன்னுடைய ராஜபோகத்தில் நீயும் உன் மாமியாரும் என்னை மறந்துவிட்டீர்கள் போலும் என்று தேம்பித் தேம்பி அழுதாள்; திடீரென்று நான் விழித்துக்கொண்டேன். பார்த்தால் ஒருவரையுங் காணேம். அதைப்பற்றி தங்களிடம் காலையிலேயே கேட்டுக்கொள்ள வேண்டுமென காத்திருந்தேன்; தாங்கள் அவசரமாக யாரோ மந்திரி வந்திருப்பதாக சென்றுவிட்டீர்கள்! இப்பொழுதான் சாவகாசம் கிடைத்தது.

ஜமீன்தாரர்—மந்திரி அல்ல! சென்னையில் நம்முடைய இந்தியா சட்டசபையின் அக்கிராசனராகிய வீரர். வி. ஜே. படேல் வந்தார்! அதற்காக சென்றேன். நீ கூறிய கனவின் பலன் எனக்கு சரியாக விளங்கவில்லை! சோமசுந்தர குருக்களை கூப்பிடச் சொல்லுவோம்.

[கூப்பிடு மணியைத் தட்டல், (Calling Bell) ஒரு காவற்காரன் ஓடிவரல்.]

ராதாபாய்—நாதா! குருக்கள் வேண்டாம்; தலையை விரித்து மஞ்சள் குங்குமம் அணிந்திருப்பது நமது கிராம தேவதையாகத்தான் இருக்கும். ஆகையால் கந்தப்ப பூசாரியை கூப்பிடச் சொல்லுங்கள்; என்மாமியாரும் கிராமதேவதையின் ரூபமென்றே சொன்னார்கள்.

ஜமீன்தாரர்—ஆனால் சரி! அடே! சேவகா! நம் கிராம தேவதை கோயில் பூசாரி கந்தப்பப் பூசாரியை அழைத்துக் கொண்டு வா.

காவற்காரன்—மஹாராஜ்! அப்படியே. (ஓடல்.)

[பூசாரியும் காவற்காரனும் வருதல். ஜமீன்தாரர் ஆசனத்தில் அமர்ந்திருத்தல். அவர் மனைவி ராதாபாய் பக்கலில் ஒரு நாற்காலியில் வீற்றிருத்தல்.]

பூசாரி—மஹாப்பிரபோ! அடியேன் நமஸ்காரம்!

ஜமீன்தாரர்—பூசாரி! இரவு நமது ராதா ஓர் கனவுகண்டது. அதின் பலாபலனை நன்கு ஆராய்ந்து கூறவேண்டும்.

பூசாரி—பிரபோ! அடியேன் காத்துக் கொண்டிருக்கின்றேன்! கனவு யாதோ!

ஜமீன்தாரர்—கூந்தலை விரித்துக்கொண்டு மஞ்சளுடையும், குங்குமப்பொட்டும் அணிந்துள்ள ஒருவாலிபப்பெண்

வந்து என்னை மறந்துவிட்டீர்களேயென்று கூறி அழுததாம்! வேறொன்றுமில்லை,

பூசாரி—மகராஜ்! தங்களுடைய பரம்பரையாராகிய முன்னோர்களால் ஸ்தாபிக்கப்பட்டதும் தங்கள் குலத்திற்கும், ஜமீனுக்கும், குடிகளுக்கும், குல தெய்வமாய் விளங்கும் நமது கமலகண்ணி அம்மனாகிய கிராம தேவதையே! அக்கிராம தேவதைக்கு தங்களுடைய முன்னோர்கள் வருடா வருடம் விழா நடத்தி வீட்டிற்கொரு ஆடோ, கோழியோ, பலிகொடுக்கும்படியும், அரண்மனைக்கடாவென தங்கள் பெரியோர்கள் 3 எருமைக் கடாக்களையும் அம்மனுக்குப்பலியிட்டுச்சிறப்புச் செய்வார்கள்! தாங்கள் லண்டனுக்குப் போயிருந்த காலத்தில் தங்கள் தகப்பனாரும் நடத்தினார். இப்பொழுது சுமார் 13வருஷங்களாகின்றன! பிரபுக்களுடைய அன்னையாருக்கும் தெரியும்! தாங்கள்தான் அதை மறந்துவிட்டீர்கள்! அதனால் அம்மன் தங்களுக்கு ஞாபகப்படுத்தவே அம்மையார் கனவில் வந்து கூறிற்று! அது அம்மனின் உருவமே!

ராதாபாய்—அப்பா உடம்பெல்லாம் சிலிர்க்கின்றதே!

பூசாரி—ஆமாம் தாயே! சக்திதானே! லோகமாதா அல்லவா!

ஜமீன்தாரர்—(ஆழ்ந்து யோசித்து) ஏ பூசாரி; அப்படியானால் நாமும் இவ்வருடம் நடத்திவிடுவோம்!

பூசாரி—மஹாப்ரபோ! தங்களரண்மனையில் களவுபோன காலத்திலேயே நான் பிரபுக்களுக்குச் சொல்லவேண்டுமென்பது! எனக்கு மஹாபயமாக விருந்தமையால் நான்வாளாயிருந்துவிட்டேன். தாங்கள்வழக்கம்போல

நடத்திவிட்டீர்களேயானல் அம்பிகை அருளால் புத்திரசந்தானமும் உண்டாகி பெரும் போகாதி போகமாக நமது ஜமீன் பிரகாசிக்கும்.

ஜமீன்தாரர்—சரி! நாள் பார்த்துச் சொல்!

பூசாரி—சுவாமி! அடுத்த வெள்ளிக்கிழமையே நடத்திவிடலாம்!

ஜமீன்தாரர்—அப்படியே! நான் இன்று தர்பாரில் கட்டளையிட்டுவிடுகின்றேன். நீ அதற்காக வேண்டிய சாமான்களை பெற்றுக்கொள்ளலாம்.

பூசாரி—பிரபோ! அடியேன் நமஸ்காரம் சென்று வருகின்றேன். (போதல்)

ஜமீன்தாரர்—ராதா! நான் உன்னுடைய கனவின்படி அம்மனை திருப்திசெய்ய உத்திரவு செய்துவிட்டேன். இனி அம்மாளிடம் நடந்ததைக்கூறி வருத்தத்தை மாற்றி சந்தோஷப்படுத்து.

ராதாபாய்—நாதா! அவ்வாறே செய்கின்றேன்! இதைக் கேள்விப்பட்டதும் என் மாமி ஆனந்தக் கடலில் மூழ்குவார்கள்! வாருங்கள் நாழிகையாய்விட்டது. காப்பி சாப்பிடலாம்.

[இருவரும் போதல்]

## காட்சி 3.

### மன்னார்சாமி வீடு.

(சிவநேசன் சந்நியாசியால் அளிக்கப்பட்ட புத்தகத்தை வாசித்துக் கொண்டிருத்தல்.)

"வருமுயிரிரக்கம் பற்றியே யுலக
வழக்கிலென்மனஞ் சென்றதோறும்
வெருவி நின்னடிக்கே விண்ணப்பித்திருந்தேன்
விண்ணப்பஞ் செய்கின்றே னின்றும்
உருவ வென்னுயிர் தானுயிரி ரக்கந்தான்
ஒன்றதே யிரண்டிலை யிரக்கம்
ஒருவி லென்னுயிரு மொருவுமென் னுள்ளத்
தொருவனே நின்பதத்தாணை."

ஆஹா! என்னே! கவியின்பம்! என்னே பொருளின்பம்! இந்த இனிய கவியில் என்னுள்ளமூழ்கி யனுபவிக்கும் இன்பந்தானென்னே! உண்மையில் உயிர்களிடத்து இரக்கமும் என்னுயிரும் ஒன்றே! இரக்கம் இல்லையேல் நானும் இறந்தேன்! எவ்வுயிரும் என்னுயிரே!

(தயார் வருதல்)

எல்லம்மாள்—அடே அப்பா! ஏண்டா பைத்தியக்காரனைப் போல தனியாய்ப் பேசிக்கொண்டிருக்கின்றாய்?

சிவநேசன்—அம்மா! இதுதான் உண்மையாக படிக்கவேண்டிய கல்வியாகும்!

எல்லம்மாள்—சரிதான் குழந்தாய்! எங்க ஊரில்கூட இது மாதிரி படிப்புதான்! இந்த ஊரில்தான் என்னமோ கண்மூடித்தனமாக படிக்கிறாங்க. நீ சொல்வதெல்லாஞ் சரிதான்! மாரியம்மனை தூஷிக்கிறாயே அது

தான் கூடாது! மாரியம்மாள்தான் நம்ப குலதெய்வம்! அந்த அம்பாள் சக்தி யில்லாவிட்டால் நாம் இவ்வளவு பணக்காரராகவும்: நோய் நொடி யில்லாமலும் இருக்கவே மாட்டோம்! அம்பாளை தெய்வமாக நினை!

சிவநேசன்—அம்மா! என்பேரில் கோபம் வேண்டாம்! சத்தியமாக பஞ்சபூத சாட்சியாக உயிரைப் பலிவாங்குபவை தெய்வமேயல்ல!

" தாயாகித் தந்தையுமாய் தாங்குகின்ற தெய்வம்
தன்னை நிகரில்லாத தனித் தலைமைத் தெய்வம்
வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்
மலரடியென் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம்
காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம்
கருணை நிதிந்தெய்வமுற்றுங் காட்டுவிக்குந் தெய்வம்
சேயாக வெனைவளர்க்குந் தெய்வமகா தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்"

எல்லா உயிர்களிடத்துங் கருணை காட்டுமிதுவே என் தெய்வம்! என் எண்ணமெல்லாம் இந்தத் தெய்வத்தின் எண்ணங்கள்; என் சொல்லெல்லாம் இந்தத் தெய்வத்தின் சொற்கள்; என் செயலெல்லாம் இந்தத் தெய்வத்தின் செயல்கள்; என்உடல், பொருள் ஆவி, முன்றையும் இந்த ஆண்டவனுக்கே அர்ப்பணஞ் செய்துள்ளேன்!

எல்லம்மாள்—அப்பா என் செல்வமே! அப்படி சொல்லாதே! உன் சரீரத்தில் அம்பாள் நிறைய முத்துகள் போட்டு சாக பிழைக்கக் கடந்தாய். அப்போ மாரியம்மாளுக்கு ஒரு ஆடு கொடுப்பதாக பிரார்த்தித்துக் கொண்டோம்! உடனே அம்மாள் ஒரு குறையும் இல்லாமல் முத்தை இறக்கிவிட்டாள்!

சிவநேசன்—தெரியும்; அந்தபிரார்த்தனை மூடபிரார்த்தனை. நமக்கு வருகின்ற நோய்கள் யாவும் இயற்கை நோய்களே! அம்மையுங் காலராவும் ஓர்வித தொத்து நோய்களேயன்றி வேறில்லை. நமது உடல் கோளாறினாலும், சிறு சிறு விஷப் பூச்சிகளினாலேயும், நமது வினையின் பயனாலேயுமே நோய்கள் வருகின்றன. அவைகளை வரவொட்டாமல் தடுக்கநாமே வழிதேடிக் கொள்ளலாம். மீறி வந்திடில் அதற்குத் தகுந்த மருந்துகள் சாப்பிட்டால் நோய்கள் நீங்கிவிடும். நமது ஆயுள் அற்பமாக விருப்பின் எந்த முயற்சியும் பயனின்றி மரணமெய்தும்! இத்தகைய இயற்கையைத் தடுக்க வேறு எந்த சக்தியுங் கிடையாது. தாங்கள் பிரார்த்தித்துக் கொண்டபடி ஆட்டின் உயிருக்காக என் உயிரை அளித்ததென்பதும் மூட நம்பிக்கை! அவ்வாறு உயிருக்குயிர் கொடுக்கின்ற தெய்வமொன்று உலகில் இருப்பின் ஒரு மனிதரும் மரணமடைய வேண்டியதில்லை. ஒவ்வொரு மனிதனும் தன்னுயிருக்காக பிற உயிரை அந்த சாமிகளுக்குக் கொடுத்து விட்டு வாழலாம்! அவ்வாறு யாராகிலும் சாகாமல் சிரஞ்சிவிகளாக பலி கொடுத்துவிட்டு வாழ்கின்றார்களா! சக்ரவர்த்திகளும், மன்னர்களும், பிரபுக்களும், ஏழைகளும் மாண்டு மடிந்தார்களே யொழிய, ஒருவரும் வாழ்ந்து வரவில்லையே.

"ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று
சூழினுந்தான் முந்துறும்"

என்ற உண்மையை அறியாத பாமரர்களே நம்மைப் போன்ற பிறபிராணிகளைப்போலித் தெய்வங்களாகிய சிறு

தெய்வங்களுக்குப் பலியிட்டு பாவத்தை மூட்டை கட்டிக் கொள்ளுகிறார்கள்! ஆடு, கோழி சாப்பிடுஞ் சுவாமிகளும் உலகில் இருக்கின்றனவா! என்னே அறியாமை!

எல்லம்மாள்—ஐயையோ! பகட்டமாக பேசாதடா. நம்ம அங்காளம்மன் மஹா கோபி! பிரார்த்தனையைசெலுத்திதான் ஆகவேண்டும். பரம்பரையா பெரியவங்க செய்தது.

சிவநேசன்—பரம்பரையா? நம்முடைய பாட்டன் பூட்டன்களெல்லாம் உங்களைப்போலவும் அப்பாவைப் போலவுந்தானே குணமும் அறிவும் படைத்திருப்பார்கள். அவர்கள் பேச்சு இங்குவேண்டாம்! அறிவையும், சன்மார்க்கத்தையும் போதிக்கும் பண்டைய நூற்களில் நமது ஞானப் பெரியார்கள் இந்த தெய்வங்களைப்பற்றியோ, பலி கொடுப்பதைப்பற்றியோ கூறியேயில்லை.

எல்லம்மாள்—அந்த எழவெல்லாம் எனக்குத் தெரியாது. பிரார்த்தனையைச் செலுத்தித்தான் ஆகவேண்டும்.

சிவநேசன்—அப்படியானால் என்னையே பலி கொடுங்கள். தெய்வம் திருப்தியாகிவிடும்! இல்லையேல் என் தோழனாகிய அந்த ஆட்டைப் பலியிட ஒப்பவேமாட்டேன்! அதனுயிரும் என்னுயிரும் ஒன்றே! அது என்குரலைக் கேட்ட மாத்திரத்தில் மே! மே! என்று கத்திக் கொண்டு ஓடிவருகின்ற காட்சியை நீங்களே பார்த்து அதிசயப்படுகின்றீர்கள். அத்தகைய பிராணியை எந்தத் தெய்வம் கேட்டாலும் அந்தத்தெய்வத்தின் கழுத்தில் கத்தி விழுமே யொழிய இந்த எளிய சகோதரனின் கழுத்தில் விழவிடமாட்டேன்.

மன்னார்சாமி—(கண்ணுங் கண்ணிருமாக) ஆஹா! மாரி! நீயே காக்கவேண்டும் எங்கள் பிழைகளை பொறுக்கவேண்டும்! ஐயோ! என் செய்வேன்! (ஓடிவரல்)

(அந்த சப்தத்தைக் கேட்டதும்)

சிவநேசன்—அம்மா! அப்பா குரல் கேட்கின்றது (உள்ளே ஓடிவிடல்)

எல்லம்மாள்—என்ன! என்ன!! என் இப்படி துடிக்கிறீங்க!

மன்னார்சாமி—அந்தப் பரமதுரோகி எங்கே! நம்மகுலத்தை அழிக்கப் பிறந்தானே! ஐயோ இன்னும் என்னென்ன இங்கு நேருமோ! நம்ம கருப்பெருதுக்கு திடீரென்று பேதிகண்டு செத்துப்போச்சே! 250 ரூபாய் கொட்டிக் கொடுத்தேனே!

எல்லம்மாள்—ஆ! அப்படியா! (முகத்தை மூடிக்கொண்டு உட்கார்தல். அதே சமயத்தில் இரண்டு மூன்றுபேர் ஓடிவந்து,)

கூட்டம்—ஐயா நாய்க்கரே ஊர்ல மாட்டு நோய் வந்துட்டுது! அந்த தெருவில்கூட இரண்டொரு மாடுகள் செத்துப்போச்சு,

நாய்க்கர்—அப்படியா! சரி, பூசாரியைக் கூப்பிட்டு அம்மன் கோயிலில் அகண்டம் வைக்கச் சொல்லுங்க.

(இன்னும் சிலர் ஓடிவருதல்.)

கூட்டத்தார்—(வழியில் வருவோரை) ஐயா இருக்கிறாரா?

வழிபோக்கர்—இருக்குறார். இருக்குறாரு!

கூட்டத்தார்—ஐயா! ஒருதெய்வம் தலையிலே நெருப்புச் சட்டி வச்சுக்குனு மஞ்சா துணி வேப்பிலை கட்டிக்

குனு பெரிய இரைச்சல் போட்டுக்குனு அழுதுக்குனு வருதுங்க.

நாய்க்கர்—(மனைவியைப் பார்த்து) அடி நம்மசண்டாளனால் ஊருக்கே என்னமோ அனர்த்தம்வந்துடுத்து! ஐயோ நான் என்ன செய்யப்போறேன்! அங்காளம்மாநீதான் துணை! (என்று தெருவில் ஓடல்).

எல்லம்மாள்—(பையனைப் பார்த்து) பாவி! உன்னை இதற்குத்தானா பெற்றேன். அம்மன் கோபக்காரினு சொன்னனே கேட்டியா! சண்டாளா! உள்ளே போடா! தெய்வமே வந்திருக்குதாம்!

சிவநேசன்—(சிரித்துக்கொண்டே) நல்லவேடிக்கை உங்கள் செய்கை எல்லாம் பைத்தியக்காரச் செய்கையே! மூட நம்பிக்கை. சாமியாவது வருகிறதாவது!

எல்லம்மாள்—பாவி! இன்னுமா அப்படி பேசற, கொஞ்சங்கூட பயமில்லையா! சண்டாளா நீ வெளியே வராதே! இப்படிப்போ (என்று பிடித்து ஒரு அறையில் தள்ளி கதவை தாளிட்டுக் கொள்ளல்.)

## காட்சி 4.

### வீதியில் சாமியாடல்.

[தலையில் நெருப்புச் சட்டியும் உடலெல்லாம் மஞ்சள் நூலாடைகளுடனும் வேப்பிலை பிடித்த காத்தோடும் ஆவேச மாடிக் கொண்டு வரல்.)

ஆவேசக்காரன்—உஸ்ஸஸ! உஸ்ஸ்ஸ். ஹாஹா! ஓஹோ! ஓம்! ஓம் அடே மக்களா! எரியுதே! எரியுதே!

[மாரியப்ப பூசாரி, கந்தப்பபூசாரி, இன்னும் சில பூசாரிகளும் சிலம்போடும், கற்பூரத்தோடும் ஓடிவரல். ஊராரும் ஆண் பெண்ணுமாக ஓடிவரல்.]

மாரியப்பப் பூசாரி—(மருளாளியைப் பார்த்து) அம்மா தாங்கள் யார்! எங்கே வந்தீர்கள்!

மருளாளி—அடே! சிலம்பு போட்ரா! ஹாஹாஹா! உஸ்ஸ்ஸ்ஸ்! (ஆடல்.)

[மாரியப்பப் பூசாரி கந்தப்பபூசாரி முதலியவர்களெல்லாம் தெய்வத்தை வர்ணித்தல்.]

ராகம்—காம்போதி தாளம்—ஆதி.

"வீரன் இருளன் காட்டேரி
நொண்டிய சின்னன் பெத்தாச்சி
தாழித்தண்டி நல்லண்ணன்
பாவாடை இந்த பனமரத்தான்"

[பூசாரி மணியடித்துக் கற்பூரம் கொளுத்துகிறான். மன்னார்சாமி முதலானவர்கள் கும்பிடுகிறார்கள்.]

மாரியப்ப பூசாரி—நாயக்கரே உங்க வாயாலேயே கேளுங்க.

மன்னார்சாமி—(கையைக் கட்டிக் கொண்டு மருளாளியைப் பார்த்து) அம்மா தாயே! தாங்கள் யார் ?

மருளாளி—உஸ்ஸ்ஸ்ஸ். ஹாஹாஹா ! உம்ம்ம் அடே !

## மருளாளி பாடல்.

மஞ்சளைப் பூசிக்குனு மாரியாத்தா வந்தேனடா
வேப்பிலைக் கட்டிக்குனு வேம்பாத்தா வந்தேனடா
அக்கினிச் சட்டியேந்தி அங்காளம்மா வந்தேனடா
ஆரூரா வந்தேனடா அம்பிகையாள் வந்தெனடா
எக்கால தேசமெல்லாம் என்னைப் பழிப்பாரில்லையடா
பரிகாசஞ் செய்வதற்கு பல்படைத்தாரில்லையடா
நாணயம் பேசுதற்கு நாபடைத்தாரில்லையடா
சக்காளத்தி முண்டைபெற்ற சண்டாளன் பழித்தானடா
அக்காளுந் தங்கையுமா அவமானப்பட்டோமடா
வயிறு எரிகுதடா வஞ்சனை பையனாலே
எங்கள்வயிறு எரிந்துதானு உங்க ஊரு எரியுமடா
நெஞ்சுறத்த பையனையே நேரேகொண்டுவாருங்கடா.

நான் தாண்டா உங்க குலதெய்வம்! (அழுதல்)

மன்னார்சாமி—அம்மா! தாயே! தங்கள் பாலகன் இதோ இருக்கின்றேன்! என்ன குறையம்மா என் அழுகின்றீர்கள்?

மருளாளி—அடே! நம்ம குலத்தில் ஒரு பிள்ளை எனக்கு விரோதமாக பிறந்ததடா!

மன்னார்சாமி—தாயே! பராசக்தி! எல்லாம் தங்கள் கருணை தானே.

மருளாளி—ஆமாண்டா! என் அக்காமாரல்லாம் என்பேரில் கோவுச்சிக்கினு உன் ஊரை அழித்து உன் குலத்தை யும் நாசமாக்கிவிட கங்கணங் கட்டிக்குனுங்கடா! அதனால் தான் மாட்டு நோய் வந்ததுடா!

மன்னார்சாமி—(சாஷ்டாங்கமாக மருளாளி காலில் விழுந்து) தாயே! நீதான் துணை.

எல்லம்மாள்—(ஓடிவந்து சாமி காலில் விழுந்து) எங்கள் குல விளக்கே! நீதான் துணை! அறியாத பாலகர் காக்கவேணும்!

ஊரார்—அம்மா தாயே! எங்கபேரில் கோபிக்காதீங்க! உங்க குறையை தீர்த்து வைக்கிறம்!

மருளாளி—அடே மகனே! எழுந்திரடா அந்த நெஞ்சுறத்த பையனை இப்படி கொண்டு வாங்கடா!

மன்னார்சாமி—தாயே இதோ கொண்டு வருகின்றேன்! (ஓடல்) எல்லம்மாளும் பின்தொடர்ந்து போதல்)

முத்தன்—(கிராமத்தான் மருளாளியைப் பார்த்து) சாமி! இந்த வர்சம் மழை பேயுமா?

மருளாளி—என் குறை தீர்ந்தா பேயுமடா! இல்லாவிட்டால் காயுமடா?

வண்ணான்—சாமி! என் பொண்டாட்டி உண்டாயிருக்கிறு ஆண் பொறக்குமா? பெண் பொறக்குமா?

(பாட்டு)

மருளாளி—பெண் குழந்தை பிறக்குமடா
மண் விழுங்கி போகுமடா.

வணணான்—ஐயோ! இவ்வளவுதான! தலைச்சன் பிள்ளைனு சர்க்கரை கல்கண்டு வாங்கி வச்சனே!

மற்றொருவன்—சாமி! எங்க வீட்டு சேவல் காணம போய் டுத்து அது எங்கே யிருக்குது!

(பாட்டு.)

மருளாளி—சேவலது இருக்குதடா
பாவிகள் வயிற்றினிலே.

[எல்லாரும் சிரித்தல். சிவநேசனை
இரண்டுபேராக இழுத்துவரல்.]

சிவநேசன்—அம்மா! என்னை அந்த அஞ்ஞானியின் முன் இழுத்துச் செல்லாதீர்கள்! அவனிடத்தில் தெய்வமில்லை! எந்தத் தெய்வமும் எந்த மனிதர் பேரிலும் வராது! அவன் ஆடுவதெல்லாம் பொய்யே!

எல்லம்மாள்—(அவன் வாயை மூடி) பாவி! அப்படி சொல்லாதடா! அந்தத் தெய்வம் சொல்றபடியே கேளுடா! உனக்காக அழுதுடா!

மன்னார்சாமி—அடே அப்பா! நம்மகுலம் விளங்க வேண்டுமானு அந்த தெய்வத்தை வணங்கி அது சொல்றபடியே கேளு!

சிவநேசன்—எந்த குல மழிந்தாலும் என் கரங்கள் அவனை வணங்கக் குவியாது!

மருளாளி—அடே! பாலகா நான் கொடுத்த பிள்ளையடா நீ! என்ன கதை பேசற?

சிவநேசன்—அடே மடையா! மற்றொருதரம் அவ்வாறு சொல்லாதே!

மன்னார்சாமி—ஐயோ! ஐயோ! வாயை மூடடா! பாவி!

ஊரார்—என்னயா! நாய்க்கரே உங்க பையனாலே ஊரே அழிந்துவிடும்போல இருக்குதே!

மருளாளி—அடே பயலே! என் பேச்சைக் கேட்கமாட்டாயா? அடே பாலகா அவனை மண்டபத்தில்

கோதண்டமாகக் கட்டி கீழே என் தலையிலிருக்கிற நெருப்புச் சட்டியை வையுங்கடா! அவனுக்கு அப்ப தான் என்சக்தியுந் தெரியும்! பக்தியும் வரும்.

**எல்லம்மாள்**—என் தாயே! அறியாத பையன்! யாரோ சூன்யம் வச்சுட்டாங்களே! தாயே! பொறுக்கவேணும்.

**மருளாளி**—அடே! ஊரை அழிக்கிறண்டா! மாட்டு நோய் விட்டதுபோல வாந்திபேதி விடப்போறேன்.

**மன்னார்சாமி**—சாமி! தாயே! உன்னிஷ்டம்போல செய்யுறம்.

**மருளாளி**—கட்டுங்கடா! நெஞ்சு ஒறத்தவனை கட்டுங்கடா!

[ஊராரும் பூசாரிகளும் சேர்ந்து சிவநேசனைக் கட்டல். கீழே நெருப்பிடல். எல்லம்மாள் கண்ணை மூடிக்கொண்டு அழல். மன்னார்சாமி முகத்தில் கையை வைத்துக்கொண்டு அழல்.]

**மருளாளி**—(ஆவேசமாக ஆடி) அடே சிவநேசா இப்பொழு தாகிலும் கும்பிடு! விட்டு விடுகிறேன்.

**சிவநேசன்**—என்னுயிர் போயினும் நான் கும்பிடமாட் டேன்! (மருளாளி தன் கையிலுள்ள பிரம்பால் அடித் தல்.)

**எல்லம்மாள்**—ஆ என் செல்வமே! சீர் குலைய விட்டேனே! இந்தப் பாழும் வயிறு என்ன பாவத்தைச்செய்ததோ (வயிற்றிலடித்துக் கொள்ளல்)

[ஜனங்கள் பலர் புலம்பல். சிலர் அடே சிவநேசா! கும்பிட்டுவிடடா! கிராம தேவதையடா! கோபக்காரி என்று கூச்சலிடல்.]

**சிவநேசன்**—ஆ! எல்லாம்வல்ல இறைவா! பரமேஸ்வரா! உன்னையன்றி இப்போலிச் சிறுதெய்வங்களை வணங்கு வேனு!

" தன்னைவிடத் தலைமையொரு தகவினுமிங் கியலாத்
　　தனித்தலைமைப் பெரும்பதியே தருண தயாநிதியே
பொன்னடியென் சிரத்திருக்கப் புரிந்தபரம் பொருளே
　　புத்தமுத மெனக்களித்த புண்ணியனே நீதான்
என்னைவிட மாட்டாய் நானுன்னை விடமாட்டேன்
　　இருவருமொன்ருகி யிங்கே யிருக்கின்ரே மிதுதான்
நின்னருளே யறிந்ததெனிற் செயுஞ்செய்கை யனைத்தும்
　　நின்செயலோ யென்செயலோ நிகழ்த்திடுக நீயே"

எல்லம்மாள்—ஆ! என் கண்ணே! ஐயோ! என் செய்வேன்! தெய்வமே! தெய்வமே !! (அழுதல்.)

ஆவேசக்காரன்—பாரடி பாதகி! குலத்தை அழிக்கவேண்டுமா ?

மன்ஞர்சாமி—(மனைவியைப் பிடித்து) அடிபாவி! வாயைத் திறவாதே!

[அந்த சமயத்தில் ஒரு ஜோஸ்யர் ஓடிவரல். எல்லாரும் பிரமித்தல்.]

ஜோஸ்யர்—ஐயா! நாய்க்கரே! ஊரிலுள்ள பெரியோர்களே! நான் ஒரு பெரியஜோஸ்யன்! நானும் இந்தகோலத்தையெல்லாம் கவனித்து வந்தேன். இவன் பேர் வழிப்படி இன்னும் ஐந்து நாளைக்கு ஏழரைநாட்டு சனியன் இருக்கிறது. அதுவரை நீங்கள் என்ன செய்தாலும் அப்படியேதான் பேசுவான். ஆகையால் அவனை அவிழ்த்து ,வீட்டிற்குக் கொண்டுபோய் இந்த ஐந்து நாளும் ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டிருங்கள். பிறகு இந்த மாரியின் பிரதம பக்தனுக மாறிவிடுவான்!

மாரியப்ப பூசாரி—எந்த ஊர் ஜோஸ்யரய்யா நீர்! சாமிக்கு மேல் நீர் தெரிந்தவரா! சீச்சி தூரபோ! மறுபடியும் சாமி உத்திரவு இல்லாத அவிழ்க்கப்படாது!

மருளாளி—(கோபமாக ஆடி) ஆரடா ஜோஸியா! ஏழரை நாட்டு சனியனு! என்னைக் கண்டால் நவக்கிரகங்களும் நடுங்குமடா!

சிவநேசன்—அடே சாமியாடுகிறவனே! உன்மேல் வந்தாடுகிற சாமி உண்மையாக சக்தியுள்ள சாமியாக விருப்பின் என் புத்தியைத் திருப்பட்டும்! இல்லையேல் உன் மூலமாக வருகின்ற சாமி என் எதிரில் பிரத்யக்ஷமாக வந்து கூறட்டும்! என் தாயும் தந்தையும், மற்றும் ஊரிலுள்ள பெரியோர்களும் மூட நம்பிக்கையில் மூழ்கி யிருப்பதனுலேயே நீங்கள் அவர்களை ஏமாற்றி சிறுவனுகிய என்னை துன்பப்படுத்துகின்றீர்கள். இந்த ஊரில் ஒரு அறிவாளி யிருப்பானுயின் உங்களுடைய அடாத செய்கையெல்லாம் படாத பாடு பட்டுப் பறந்துபோகும்! இன்னும் என்னென்னகொடுமை உங்களால் செய்யமுடியுமோ அவ்வளவும் செய்யுங்கள். இந்த காயம் மண்ணோடு மண்ணுக மடிந்தாலும் உங்களெண்ணமென்னமோ சாயாது!

மாரியப்ப பூசாரி—நீ இன்னேரம் பாடி கூப்பிட்டாயே அந்த சாமி யேன் உன்னை மீட்க வரவில்லை!

சிவநேசன்—வரமாட்டார். அவர்வேண்டுதல், வேண்டாமை யிலாதவர்! பகைவரென்றுஞ் சிநேகிதரென்றும் அவரிடத்து வித்தியாசங் கிடையாது! எல்லா உயிர்களுக்குந் தாய் தந்தை போன்றவர்! அவரவர் செய்தவினை

யை அவரவரே யனுபவிப்பர்! உங்கள் சாமி ஆள் பேரில் வந்து என்னை அடித்தது. அதற்காக எங்கள் சாமி வேறொரு ஆள்பேரில்வந்து உங்களை அடிக்காது. ஆனால் என் தூய்மையான எண்ணத்தாலும், தூய்மை யான வார்த்தையாலும், தூய்மையான ஒழுக்கத்தா லும், அந்த அப்பன் அருள் என்னை மேற்கதிக்குக் கொண்டுபோகும் சக்தியுடையது!

மருளாளி—அடே துஷ்டப் பயலே! உன் தத்துவத்தை நிறுத்து. நாய்க்கரே! நான் இன்று இரவே இந்தப் பயலுக்கு என் ரூபத்தைக் காட்டுகின்றேன். அதன் பிறகாகிலும் அப்பயல் நம்மை வணங்கி பலியிட்டால் நாம் அவனை மன்னிக்கின்றோம்! இல்லையேல் அவனை சின்னாபின்னப்படுத்தி விடுகின்றேன். இன்றிரவு யாவரும் வெளியில் வரப்படாது! ஆயிரங் கண்ணோடு வருவேனாகையால் அக் கண்களை பார்த்தவர்கள் எரிந்துவிடுவார்கள்! நாய்க்கரே நீ அடுத்த வெள்ளிக் கிழமை உன் பிரார்த்தனைப்படி பூஜை செய்து பலி கொடுத்துவிடு. பையனாசையை அறவே மறந்துவிடு. இப்பொழுது அவனை அவிழ்த்து விடுங்கள். நான் போய் வருகின்றேன். (கீழே சாயல்)

[எல்லோரும் போய் சிவநேசனை அவிழ்த்து விடல். அவன் தன் தாய் தந்தையரோடு வீட்டிற்குச் செல்லுதல். மற்ற ஜனங்களும் வீட்டிற்குச் செல்லுதல்.]

ஜோஸ்யவேடதாரி—ஆ! சிவநேசன் குருவின் மொழியை தெய்வ மொழியாகக் கொண்டு உண்மை வழியில் ஒழுகி பல இன்னல்களுக்கு ஆளாகின்றான்! நாமோ

சிவநேசனை இவ்வளவு உறுதியாகவும் ஒழுக்கமாகவும் நடப்பானென்று எண்ணவேயில்லை! பாவிகள்! பல துன்பங்களை விளைவிக்கின்றார்கள்! ஆவேசக்காரன் முன் ஜோஸ்யமும் பலிக்கவில்லை. மிஞ்சினால் நம்முடைய கதி அதோ கதிதான்! இருக்கட்டும். இன்றிரவு ரூபங்காட்டுவதாக சபதஞ் செய்துள்ளான்! இதற்காக ஏதாகிலும் சூழ்ச்சி செய்வார்கள்! அதனாலேயே யாவரும் வெளியில் வரப்படாதென்று பயமுறுத்தியுள்ளான். நாமோ எங்கேயாகிலும் மறைந்து இவர்கள் சூழ்ச்சியைக் கண்டுபிடித்தல் வேண்டும். செல்வோம்.

## அங்கம 4.

### காட்சி 1.

இரவு 9-மணி

மன்னார்சாமி வீடு.

[மன்னார்சாமியும், அவர் மனைவியும், சிவநேசனும், வீற்றிருத்தல்.]

மன்னார்சாமி—அப்பா! சிவநேசா! நீ ஈஸ்வர பக்தனாகவிருப்பதை நான் தடுக்கவில்லை. நம்முடைய குல தெய்வத்தை மாத்திரம் நிந்திக்காதே! நம் முன்னோர்கள் இந்த தெய்வத்தினாலேயே சுகமாகவும் பெருங்குடும்பமாகவும் நோய் நொடிகளின்றியும் வாழ்ந்து வந்தார்கள். இந்த மாரியின் கிருபையால்தான் நீ பிழைத்தெழுந்தாய்! இன்றிரவு அம்பாள் உன்முன் தோன்றுவாள் நீ அவளை அன்புடன் வணங்கி அவளிஷ்டப்படி நடப்பதாக வாக்குறுதி கொடுத்துவிடு. இல்லையேல் கோபக்காரி ஏதாகிலுஞ் செய்துவிடுவாள்!

எல்லம்மாள்—என் இளஞ் சிங்கமே! அப்பா பேச்சைக் கேளு! மாரியம்மாளுக்குப் பணிஞ்சுபோ! நீ சுகமாயிருப்பெ! நீ செத்துப்போனு நானுஞ் செத்துப் போவேன்! இராத்திரி அம்மா வருவாள். அவளைக் கும்பிட்டு ஆடு பலி கொடுத்து விடுறன்னு சொல்லி விடு!

சிவநேசன்—அப்பா! அம்மா! நீங்களிருவரும் கவலைப் படவேண்டாம். தெய்வம் வந்து ரூபத்தைக் காட்டட்டும்! நான் தங்களிஷ்டப்படி நடக்கின்றேன்.

இருவரும்—சந்தோஷம்! என் கண்ணே! (முத்தங் கொடுத்துவிட்டு போதல்)

[சிவநேசன் தன் படுக்கையில் உட்கார்ந்து கொண்டு பாடல்.]

இராகம்-சுருட்டி தாளம்—ஆதி
(கீதார்த்தமு என்ற மெட்டு)

பல்லவி

தேவாதி தேவாநின் பாதாரவிந்தம்
சேவை பரமானந்தம் நீதம்

அநுபல்லவி

ஜீவகாருண்ணிய சீலமே பெற்றவர்
தாவாதயின்பம் தானெய்துவரெனுந் (தே)

சரணம்

உடலெலாமுயிரெலாம் உணர்வெலாமுள்ளமெலாம்
உனையன்றி வேறுளதோ ஒளிதரும் பொருளே
படிதனிலுயிர்தமை பரிந்து பசிப்போரை
பணியமனம் பரவும் பாசமே தந்தருளும் (தே)

[படுத்துக்கொள்ளல். இரவு 12 மணிக்கு கருப்புநிற உடையோடு தீவட்டித் தாங்கிய நால்வரில் இருவர் வெளியே நிற்றல் இருவர் உள்ளே சென்று சிவ நேசனைத் தட்டி எழுப்பல்.]

சிவநேசன்—(அச்ச முகத்தோடு) யார் நீங்கள் ?

தூதர்—நாங்கள் மாரியம்மாளின் தூதுவர். அம்பாள் உன்னை பிடித்துவர உத்திர விட்டுள்ளார்கள்.

சிவநேசன்—எங்கே போக வேண்டும் ?

தூதுவர்கள்—நாங்கள் தூக்கிக் கொண்டு செல்லுகின்றோம்.

சிவநேசன்—என் தாய் தந்தையரை அழைத்துக் கொண்டு வருகின்றேனே.

தூதுவர்கள்—கூடாது! நீ மாத்திரம் வரவேண்டும். (என்று கூறிக் கொண்டே தூக்கிச் செல்லுதல்).

சாது—ஆ! எங்கேயோ தூக்கிக் கொண்டு செல்லுகின்றார் களே ! போலீஸ்டேஷனும் அருகாமையில் இல்லே. கிராம மூடர்களோ நம்பேச்சைக் கேட்க மாட்டார்கள். ஐயோ ! என்ன செய்வார்களோ! எதற்கும் நாம் பின்னே செல்வோம்.

## காட்சி 2.

### ஒரு மலே.

[அதன்மேல் அம்மன் வேடந்தாங்கிய மனிதன் வீற்றிருத்தல். இருபுறங் களிலும் கருப்புடையோடு கூடிய நால்வர் வாளோடு நிற்றல். சிவ நேசனைத் தூக்கிக்கொண்டு அம் மன் முன் வருதல்.]

ஓதுவர்கள்—(சிவநேசனைப் பார்த்து) அடே மகனே இதோ அம்மன் ! சேவை செய் !

சிவநேசன்—(சற்று உற்றுப்பார்த்து) பொறுங்கள். அம்மன் வாயைத் திறந்து என்னோடு பேசட்டும்.

அம்மன்—அடே மகனே! இனி சந்தேகப்படாதே! சிக்கிரம் வணங்கு ! உங்கள் குலதெய்வம் நானே !

சிவநேசன்—தாயே! நீ குலதெய்வமோ! கோர தெய்வமோ எனக்குத் தெரியாது.

"மருவாணைப்பெண்ணாக்கி யொரு கணத்தில்
கண்விழித்து வயங்கு மப்பெண்
உருவாணை யுருவாக்கி யிறந்தவரை
எழுப்புகின்ற உருவனேனுங்
கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக்
கடிந்துண்ணுங் கருத்தனே லெங்
குருவாணை யெமது சிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொணாதே"

ஆணைப் பெண்ணாக்கி அப்பெண்ணை ஆணாக்கும் ஆற்றலோடு, இறந்தவரை எழுப்புகின்ற பெருஞ் சக்திவாய்ந்த முனிவராயினும், உயிர்களிடத்து இரக்கமின்றி அவற்றைக் கொன்று ஊனைப் புசிப்பின் அவனை என் குரு ஆணையாகவும் எனது சிவபெருமான் ஆணையாகவும் ஞானியெனக் கூறேன் என்ற அருட்பா மொழிப்படி உன்னை தெய்வமாக கூற முடியுமா ? நீயோ ஆடு, கோழி, பன்றி, எருமைக்கடா, முதலிய திக்கற்ற உயிர்களைப் பலி வாங்குவதுமன்றி, கள் சாராயங் குடிக்கும் கொடியவளாகவு மிருக்கின்றாய் ! இழி செயலுடைய உன்னை நான்

கண்டதே தோஷம்! என்னைக் கொன்றாலும் நான் உன்னை தெய்வமாக வணங்கவே மாட்டேன்! இது நிச்சயம்.

அம்மன்—ஆ! துஷ்டா! என்னைக் கண்டதினாலேயே தோஷமா? உன் குடலைப் பிடுங்கி விடுகின்றேன் பார் (ஆவேசமாக எழுந்து கையிலுள்ள சவுக்கால் அடித்தல்)

சிவநேசன்—அந்தோ! அந்தோ! சர்வேசா! காத்தருள்! காத்தருள்! காத்தருள்! சண்டாளர் கையில் சிக்கினேனே!

அம்மன்—அடே மடப்பயலே! இப்பொழுதே உன்னை இந்த படு நெருப்பில் தள்ளி வதைக்கின்றேன்! வணங்குகின்றாயா இல்லையா!

சிவநேசன்—என் உயிர் போயினுஞ் சரியே! உன்னை வணங்கேன்! வணங்கேன்!! வணங்கேன்!

அம்மன்—அடே தூதர்களே! அந்தக் குழியில் நெருப்பு மூட்டி இந்தப் பாதகனை அதில் தள்ளுங்கள்!

[அவ்வாறே அத்தூதுவர்கள் அவனைச் சூழ்ந்து பிடித்துக்கொண்டு இழுத்தல்.]

சிவநேசன் பாடல்.

"தீராத துயர்க்கடலி லழுந்தி நாளுந்
தியங்கியழு தோங்கு மிந்தச் சேய்க்கு நீ கண்
பாராத செயலென்னே யெந்தா யெந்தாய்
பாவியென விட்டனையோ பன்னாளாக
ஏராய வருள்தருவா யென்றே யேமாந்
திருந்தேனே யென்செய்கேன் யாருமில்லேன்
சீராருங் கைலைவரை யமுதேயாதி
தெய்வமே நின் கருத்தைத் தெளிந்திலேனே"

தூதர்கள்—அடே! நட! நட!! இதோடு நெருப்புக்கிரை தான் (தள்ளல்! அடித்தல்.)

சிவநேசன்—அம்மா! அப்பா! என் குருவே! எங்கு இருக்கின்றீர்களோ! என் செய்வேன்! (அழல்)

[அந்த சமயத்தில் சாது ஒன்றுஞ் செய்யத் தோன்ருது, புலித்தோலை உடலெல்லாம் மூடிக்கொண்டு ஒரு பெருங்குரலால் உறுமி ஒரே குதியாய் குதித்து ஓடிவரல். அவர்கள் யாவரும் புலி! புலி! என்று கூக்குரலிட்டுக் கொண்டு ஓடிவிடல். சிவநேசனும் அவர்களுடனே ஊருக்குள் ஓடிவிடல். வேடதாரிகள் தனித் தனியாக மறைந்து விடல். சிவநேசன் தனியாக இருளில் வீட்டிற்குச் செல்லுதல்.]

சிவநேசன்–(தனக்குள்) இனி இவ்வூரில் இருப்பின் நம்மை இன்னும் பல துன்பத்திலாழ்த்தி கொலையும் செய்து விடுவார்கள். இப்பொழுது நமக்கு தெய்வமாக ரூபங் காட்டியவர்கள் மனிதர்களே! பாவம்! புலியைப் பார்த்து பயந்த தெய்வமும் தெய்வமாகுமா! யாரோ இவ்வேடம் தாங்கி நம்மை மயக்கப் பார்த்தார்கள். நம்முடைய நல்வினையே அங்கு புலி வந்தது! எவ்வாருயினும் நம்முடைய தாய் தந்தையர் மூட நம்பிக்கைக் கொண்டவர்கள். நம்மை நிராகரித்து நாம் வளர்த்து வரும் ஆட்டைப் பலி கொடுத்து விடுவார்கள். ஆகையால் இப்பொழுதே ஆட்டைப் பிடித்துக்கொண்டு ஊரைவிட்டு ஓடி விடுவதே நலம். (என்று சிந்தித்து நேராக ஆட்டினிடம் சென்று ஆட்டைப் பிடித்துக் கொண்டுபோய் விடுதல்.)

## காட்சி 3.

காடு.

பகல் மணி 8.

சிவநேசன்—ஆ! இந்த இருள் சூழ்ந்த காட்டில் வந்துவிட்டோம். இனி நம்மை கேட்பாரில்லை. இங்கு உட்கார்ந்து சற்று இளைப்பாறுவோம். (ஆட்டின் கழுத்தைக் கட்டிக்கொண்டு) தம்பி! உன் உயிரை மாய்க்க என் பேதை பெற்றோர்கள் இன்று கங்கணங் கட்டிக்கொண்டிருந்தார்கள். உன்னை இவ்வளவு அன்போடு வளர்த்த நான் அந்த அரக்கரிடங் காட்டி கொடுப்பேனு! நீ என்னிடத்தில் வைத்துள்ள அன்பை அளவிட்டு உரைக்க முடியுமா! நான் மறந்தாலும் நீ என்னை மறப்பதில்லையே! ஆ! ஏதோ சப்தங் கேட்கின்றது! (திரும்பிப் பார்த்தல்)

[ஜமீன்தாரர் இரண்டு மூன்று சேவகர்களோடு வேட்டையாடல்.]

சேவகர்கள்—சாமி! அதோ இரண்டு காட்டு புறுக்கள் இருக்கின்றன.

ஜமீன்தாரர்—எதோ! எதோ! (என்று துப்பாக்கியுடன் ஓடிவரல்)

சேவகர்கள்—(மரத்தைக் காட்டி) அதோ பாருங்கள்!

ஜமீன்தாரர்—எதோ! தெரியவில்லையே!

சேவகன்—என் கைக்கு நேராக பாருங்கள்.

ஜமீன்தாரர்—ஆம்ம்! (குறி பார்த்தல்.)

சிவநேசன்—(அவர்களைப் பார்த்து விட்டு ஐயோ பாவம்! எதையோ சுடப்போகின்றார்களே!) இந்தப் பாழான

உயிர் போயினும் அந்த எளிய உயிரைக் காப்பதே தருமமல்லவா! செல்வோம். (ஓடி ஜமீன்தாரர் கையைப் பிடித்துக் கொள்ளல்).

ஜமீன்தார்—*தம்பி! நீ யார்?*

சிவநேசன்—*அரசே! அந்த இரண்டு பக்ஷிகளும் ஆணும் பெண்ணுமாகும்! அவைகளின் குட்டிகளுக்காக இரை தேட இங்கே வந்துள்ளன. இந்த இடத்தில் நீங்கள் அவைகளைக் கொன்று விட்டால் தாய் தந்தைகள் இரை கொண்டு வருவார்களென்று கூண்டில் பசியோடு எதிர்பார்க்கும் குட்டிகளின் கதியென்ன? இவ்விரண்டும் உயிர் விடுகையில் தங்கள் குட்டிகளை நினைத்து பரம துக்கமடையாவா! இவ்விடத்தில் தங்களுக்கொரு ஆபத்து நேரின் உங்கள் மனமும் வீட்டிலுள்ள உங்கள் சுற்றத்தார் மனமும் என்ன பாடு படும். இதனை நினையாது இந்த பாவச் செய்கையை செய்வது தங்களைப் போன்ற அறிவாளிகளுக்கு அழகாகுமா?*

> *"கொல்லா விரதங் கொண்டவரே நல்லோர்*
> *மற்றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே!"*

*என்ற அறமொழிகளைத் தாங்கள் கேட்டதில்லையா?*

ப்ால கங்காதர திலகரே என்ற மெட்டு.

> *சிவகாருண்ணிய சீலமே*
> *சிந்தை பெருமின்ப கோலமே*
> *பாவவினை போக்கு மூலமே*
> *பல்லுயிர்க்கு மனுகூலமே* (சிவ)

அன்புநிறை மனமேடைபதே
ஆண்டவன் நர்த்தன மாடுவதே
புன்புலா லொழித்து வாழுவதே
புண்ணிய பிறப்புண் டாக்குவதே (சிவ)

சமரச சன்மார்க்க போதியே
சத்தியந் தழைக்கும் நீதியே
அமரர்கள் போற்றிடு மாதியே
ஐயனருட் பெருஞ் ஜோதியே (சிவ)

இத்தகைய மேலான நீதியை மறந்து மாமிஸ முண்பதற்காக சிறிது மிரக்கமின்றி உயிர்க் கொலை செய்யலாமா? அநேக நமஸ்காரம்! கொலைக் கருவியை தூர எறியுங்கள்.

ஜமீன்தாரர்—தம்பி! நீயே என் குரு! என் அறியாமையால் ஏற்பட்ட இந்தத் துர்வழக்கமாகிய வேட்டை யாடலை இன்றோடு ஒழித்து விடுகின்றேன்! மாமிஸம் மனிதருடைய ஆகாரமல்ல வென்பதை இங்கிலாண்டு சென்ற காலத்திலேயே உணர்ந்தேன். அதை இன்றே உறுதிபடுத்துகின்றேன். இனி மாமிஸமும் புசிப்பதேயில்லை, இதே சத்தியம் சத்தியம்! (துப்பாக்கியைத் தூர எறிதல்)

சிவநேசன்—தங்களுடைய ஹிருதயமே எம்பெருமான் நடம்புரியும் இடமென வறிந்தேன்! தங்களைப் போன்ற தயா மூர்த்திகளாலேயே உலகிலுள்ள அநாதை உயிர்கள் க்ஷேமமாக வாழ வேண்டும்! தங்கள் கருணை குணத்திற்காக பன்முறையும் நமஸ்கரிக்கின்றேன்!

ஜமீன்தார்—தம்பி! அநேக வந்தனம்! நான் போய் வருகின்றேன்! உன் அறிவிற்கு மெச்சுகின்றேன்! (சேவகர்

களைப் பார்த்து) அடே! சேவகர்களே! டிரை வரைக் கூப்பிட்டு மோட்டாரை ஸ்டார்ட் செய்யச் சொல்லுங்கள். ஊருக்குப் போகலாம்!

சிவநேசன்—ஐயா! நமஸ்காரம் போய் வருகின்றேன்.

ஜமீன்தார்சி—போய்வா தம்பி! போய்வா! எல்லோரும் போதல்.

சிவநேசன்—(தனக்குள்) என்னே ஆனந்தம்! இந்த இரண்டு பக்ஷிகளும் இன்னேரம் எமன் வாய்ப்பட்டிருக்கும். அவைகளின் ஆபத்தை தீர்த்த அடியேனை ஆண்டவன் கைவிடுவானு! போவோம்!

## காட்சி 4.

### ஏனுதி குப்பம்.

மாரியப்ப பூசாரி—அண்ணன்! எளியாரை வலியார் வாட்டினுல் வலியாரை தெய்வம் வாட்டும் என்ற பழமொழி பலித்துப் போச்சே!

சப்பாணி—ஆமாம்! ஆமாம்! ஆனுல் ஒன்று! அந்த பையன் இரவு நடந்த புலி சமாசாரத்தை வெளியில் சொன்னுனேயானுல் ஊரார் சந்தேகப்பட மாட்டார்களா?

மாரியப்ப பூசாரி—உம்ம். அவ்வளவு மூளை இங்க எவனுக்கு இருக்குது! தெய்வமே புலியாக வந்து மிரட்டிருக்குமென்று சொன்னுல் எல்லாரும் ஆமாம்! ஆமாம்! என்பானுங்க. அதற்கொன்றும் பயமில்லே.

[மன்னுர்சாமி வருதல்.]

மாரியப்ப பூசாரி—வாங்க நாயக்கரே! உட்காருங்க! ஏழைகள் வீடு, குப்பையுங் கூளமாதான் இருக்கும். என்ன சமாச்சாரம்! பையன் என்ன செய்கின்றான்!

மன்னார்சாமி–(மெதுவாக) பையனைக் காணோமே! மணி 10 ஆயிற்றே.

மாரியப்ப பூசாரி—அப்படியா! கோயிலில் போய் பார்ப்போம்! அம்மன் சுயரூபங் காட்டியிருப்பாள்! இரவு ஏதாகிலும் உங்க வீட்டில் சந்தடி ஏற்பட்டதா?

மன்னார்சாமி—ஏற்பட்டது! நாங்கள் பார்க்கவில்லே.

மாரியப்ப பூசாரி—வாருங்கள் கோயிலுக்குப் போகலாம்!

(எல்லாரும் போதல்.)

மன்னார்சாமி—பூசாரி என் பிள்ளையை!—......(அழுதல்)

பூசாரி–பயப்படாதீங்க! நம்ப மாரியம்மா ஒன்றுங் கெடுத்துவிடமாட்டா! அழாதீங்க.

[கோயிலே திறந்து பார்த்தல்.]

மாரியப்பப் பூசாரி—காணோமே! நாயக்கரே நீங்க வீட்டிற்குப் போங்கள். நாங்கள் அம்மனைக் கேட்டுக்கொண்டு வருகின்றோம்.

[மன்னார்சாமி துக்கத்தோடு மெதுவாக போதல்.]

மாரியப்பபூசாரி—நாய்க்கர் போய்விட்டாரா? அண்ணே! பையனைப் புலி அடிச்சுடுத்துனு பார்க்கிறன்!

சப்பாணி—அப்படித்தான் இருக்கும்! பாவம்! அறியாத பையன் நம்மோடு ஓடிவர முடியவில்லே.

மற்றொருவன்—ஒழியட்டும்! உயிரோடு வந்திருந்தால் நம்ம சங்கதி வெட்ட வெளிச்சமா போய்டும்.

மாரியப்ப பூசாரி—ஆமாம்! ஆமாம்! நல்ல காலந்தான்! அது வரையில் நம்ம ஆளுங்க தப்பிச்சிக்கினுங்களே அது எவ்வளவு மேலு!

சப்பாணி—அப்பா! பாழான புலி! அது நிறைய தினி இன்னுப்புட்டு இருந்தா போல இருக்குது! ரெண்டு பாய்ச்சல் தான் பாஞ்சுது!

மற்றொருவன்—இல்லே! இல்லே! அந்தப் பையன் அகப்பட்டான் அதோடு ஓடிப்பூடுத்து!

[ஒரு ஆள் வந்து மாரியப்ப பூசாரி யிடம் கடிதம் கொடுத்தல்.]

மாரியப்ப பூசாரி—ஓஹோ! ஜமீன்தாரர் நாளைக்கு அம்மன் பூஜையை நடத்தப் போறாராமே! ஊர்ல எல்லாருக்குஞ் சொல்லச் சொல்லி கந்தப்ப பூசாரி எழுதி யிருக்குறாரு.

சப்பாணி—சரி! சரி! நமக்கெல்லாம் 10 நாளைக்கு அட்டகாசந் தான்! ஊருக்கெல்லாஞ் சொல்லிவிட்டு புறப்படு இராத்திரிக்கே அங்கு போய்டுவம்.

மாரியப்பன்—சரி வாங்க போகலாம். அதுவரை இந்த சமாச்சாரமும் மறக்கட்டும்.

[எல்லோரும் போதல்.]

## அங்கம் 5.

### காட்சி 1.

---

ஜமீன்தாரர் வீடு.

[ஜாமீன்தாரர் சாப்பிட்டுவிட்டு ஹாலில் உட்கார்ந்திருத்தல்.]

ராதாபாய்—நாதா! தாங்கள் 3,4 மணிக்கு தான் வருவதாக சொன்னீர்கள். என்னமோ 11-மணிக்கே வந்து விட்டீர்களே !

ஜமீன்தாரர்.—நான் அந்த அதிசயத்தை என்னென்று சொல்வேன். மனதே கெட்டு விட்டது.

ராதாபாய்—என்ன அதிசயம்! மனங் கெடும்படியான அதிசயம்.

ஜமீன்தாரர்—காட்டிற்குச் சென்றதும் முதன் முதல் இரண்டு காட்டு புருவைக் கண்டோம். அதைச் சுட குறி பார்த்தேன். அந்த சமயத்தில் ஆடுமேய்க்கும் சிறுவன் ஓடி வந்து என் கையைப் பிடித்துக் கொண்டு அவைகளைச் சுடாதீர்கள். கொலை செய்வது பாவமல்லவா ! குட்டிகளுக்குத் தினி கொண்டு போகவந்த தாய்ப் புருவைக் கொன்று விட்டால் குட்டிகளின் கதியென்ன வென்று இறைஞ்சினான். உடனே என் மனங் கரைந்து விட்டது. அந்தத் துப்பாக்கியையும் எரிந்து விட்டு வாளா வந்து விட்டேன்! பிறகு வேறொன்று என் மனதில் புகுந்து வாட்டுகின்றது. சிவகாருண்யத்தை எண்ணி வேட்டையாடாது இரண்டு புருவை ரக்ஷித்த நான் நாளையதினம் ஆயிரக் கணக்கான உயிர்களைப் பலியிட உத்திரவு செய்திருக்கிறோமே இந்தப் பாவத்திற் கென்ன செய்வதென்று விளங்காது இருதலைக் கொள்ளி எறும்பு போல விழிக்கின்றேன் !

ராதாபாய்—அதுவேறு! இதுவேறு! இங்கே தெய்வத்திற்குப் பலி கொடுக்கின்றோம்! இது பாவமில்லை. தங்கள் பரம்பரையார் பலி கொடுத்து வந்துள்ள குல

தெய்வமல்லவா! இல்லாவிடில் அம்மன் கோபங் கொண்டு ஏதாகிலும் துன்பத்தை உண்டாக்கி விடுவாள்! மேலும் பிரார்த்தித்துக் கொண்டோம்! இது நடந்து விடட்டும்.

ஜமீன்தாரர்—தெய்வங்களுக்குப் பலி கொடுத்தல் முட்டாள் தனமானதென்றே நான் இத்தனை வருடங்களாக தள்ளிக்கொண்டு வந்தேன்! என்னமோ கனவு! கனவு! என்று அழுதனை, அதனுல் ஊரெல்லாம் தாகீதும் அனுப்பப்பட்டு விட்டது! நாளையதினம் பிரார்த்தனைக்காரர்கள் வந்து விடுவார்கள்! என் செய்வது! பார்க்கலாம் கடவுள் இருக்கிறுர்.

[அதற்குள் ஒரு காவலாளி வந்து]

காவலாளி—சாமி நமஸ்காரம்! போலீஸ் ஐயாவுங்க! துரை ஐயாவுங்க வந்திருக்கிறுங்க.

ஜமீன்தாரர்,—சரி! இங்கே அழைத்துக் கொண்டு வா.

[சர்க்கிள் இனிஸ்பெக்டர் இரண்டு ஸார்ஜண்டுகளுடனும் கானிஸ்டேபில்களுடனும் வருதல்.]

சர்க்கில்—குட் மார்னிங் ஸார் (Good morning Sir).

ஜமீன்தாரர்—குட் மார்னிங்.

சார்ஜண்டுகள்—குட் மார்னிங் ஸார்.

ஜமீன்தாரர்—குட் மார்னிங்.

சர்க்கிள்—ஸார்! நேற்று சில புலன்கள் கிடைத்தன. சித்தூருக்கடுத்த வனத்தில் வசிக்கின்ற வேட்டுவர்தான் இங்கு வந்து கொள்ளையிட்டதாக தெரிகிறது. ஆகையால் நாளை காலை அங்கு போகின்றேம்.

ஜமீன்தாரர்—**Try ! Try !** ஒரு வேளை இருக்கலாம். கூடிய வரை ட்ரை செய்யுங்கள்.

சர்க்கிள்—**Yes. That is our duty.** எப்படியாகிலும் கண்டு பிடிக்கின்ரோம் ! போதல்.

## காட்சி 2.

### காடு.

[சிவநேசனும் ஆடும் காட்டின் வழியே நடந்து வரல். சிவநேசன் பாடல்.]

இராகம்—ஷாமா—தாளம் ஆதி
(சாந்தமுலேகா என்ற மெட்டு)

பல்லவி

தாமரை பாதா தனிபெரும் வேதா
சாந்தவர்க்கருள் போதா (தாமரை)

அனுபல்லவி.

பூமானே உயிரெலாம் பொருந்தியுளாய் நீயே (தாமரை)

சரணம்.

ஆருயிர் தமக்கன்பு ஆற்றுமோ ரருந்தொண்டு
பேரருள் அறிய பித்தமானேன் புரிய (தாமரை)
திமை புரியுஞ் சிறு தெய்வமெனும் பொய்யில்
காமுற்றமுந்தி மீளா கயவரைக் காருஞ்சிலா (தாமரை)

[ஆடு கத்துதல்.]

சிவநேசன்—ஆ! என் சகோதரா! கத்தாதே! (வாயை மூடி) உன்னுடைய குரலைக் கேட்ட மாத்திரத்தில் காடுகளிலுள்ள துஷ்ட மிருகங்கள் உன்னைக் கொன்று தின்று

விட ஓடிவரும். மானிட மிருகங்களினின்றும் மீட்ட உன்னை இயற்கை மிருகங்களிடமிருந்து மீட்க முடியாது! என் செய்வேன் ! (கட்டிக்கொள்ளல்) அப்பா! உன்னால் பேசவோ முடியாது ! என்னை நம்பியல்லோ என் பின்னே வந்துள்ளாய்! உன்னைக் கை விடுவேனா ! அஞ்சாதே! இருள் சூழ்ந்து விட்டது ! இனி வேறிடம் போக முடியாது. அதோ ஒரு கோயில் தெரிகின்றது. அதற்குள் புகுந்து கொண்டு இரவைக் கழிப்போம்! பொழுது விடிந்ததும் வேறொரு ஊருக்குப் போய் விடலாம்! கத்தாதே! தோழா ! நாம் என் செய்வது ! எல்லாம் நம் பழவினையே! பரமேஸ்வரா ! நீயே துணை.

[இருவரும் ஒரு சிறு கோயிலில் புகுந்து கொண்டு கதவைத் தாளிட்டுக் கொள்ளல். காலை 6 மணிக்கு வேடர்கள் பலர் நெருப்புச் சட்டி ; வேப்பிலை ஏந்தி பலவித வாத்தியங்கள் முழங்க ஆணும் பெண்ணுமாக கோயிலண்டை வருதல் வேடராஜன் உட்கார்ந்திருத்தல்.]

வேடராஜன்—அடே ! திம்மா ! நரபலிக்கு ஆள் ஆப்புட்டாங்களா ?

திம்மன்—இல்லே சாமி !

வேடராஜன்—பின்ன என்ன செய்யப் போற.

திம்மன்—தொப்ளான் எருமைக்கடா ஓட்டி வரேண்ணான்!

வேடராஜன்—சரி கோயிலைத் திற !

கோயிலைத் திறத்தல்.

திம்மன்—(திடுக்கிட்டு) பாடல்.

ராஜாவே! ராஜாவே!
ராவுண்டி ராவுண்டி!
துர்க்கியவள் நரபலி!
துர்க்கியவள் நரபலி!!

வேடராஜன்—(ஆச்சரியத்தோடு) அடே திம்மா! அம்மா சக்தியே சக்தி! நரபலிக்கு ஆளைத்தேடி வச்சுக்குணு இருக்கிருடா! ஆட்டையும் பையனையுங் குளிப்பாட்டி வேப்பிலைகட்டி நிறுத்து அம்மா எதிரே.

சிவநேசன்—ஐயா வேடராஜாவே! எங்களை தெய்வம் பலியிட கேட்டதா?

வேடராஜன்—தம்பி பேசாதே! நாங்க ஜமீன்தார் ஊர்ல திருடப் போனம்! அப்போ நரபலிக்குக்கூட பசங்கள் தேடினம் அகப்படல· என்னுடாணு வருத்தமா வந்துட்டம்! கடேசில எருமைக்கிடா கொடுக்கலாம்ணு வந்தம்! இங்க வந்தா உன்னையும் ஆட்டையும் அம்மா பிடிச்சு வச்சுங்கிரு! அவள் சக்தி எந்த சாமிக்கு இருக்குது! வர்சாவர்சம் நாங்க நரபலி கொடுக்குறோமே.

சிவநேசன்—கிராமங்களில் இந்த சாமிகளுக்கு நரபலி கொடுப்பது வழக்கமில்லையே!

வேடராஜன்—(வேடர்களைப் பார்த்து) அடே திம்மா! கொண்டி! தொப்பை! இந்தப் புள்ளைக்கு நம்ப தெய்வத்த நாட்டில வேண்டிக்கிற பாட்டைபாடிகாட்டுங்கடா!

மாரிப்பாட்டு.

மூவர்-"கானகத்தில்விற்றிருக்கும் கன்னனூர் மாரிமுத்தே
ஈச்சங் குறக்கூடை இருக்கட்டும் பொன்னாலே
தாழங் குறக்கூடை தனிகட்டும் பொன்னாலே
ஆற்றங்கரை மேடைவிட்டு ஆச்சியரே வாருமம்மா"

சிவநேசன்—போதும்! நானும் இதை படித்திருக்கின்றேன்.

வேடராஜன்—படிச்சி இருக்கிறியா! நாட்டில கும்பிடறவன்க காட்டுசாமினு ஏன் சொல்றுன்! மொத மொத நாட்ள கீறவன்க ஈஸ்பரன்! மாகா உஷ்ணு! ஆறுமூஞ்சு சாமி! ஆனமூஞ்சிசாமிய தான் கும்பிட்டுக்குனு இருந்தாங்க. அப்பறம் தான் எங்க தெய்வங்கள நாட்டுக் காருவச்சு கும்பிட்டான்க. எங்க தெய்வங்க நாட்டில போனபோது நரபலி கொடுத்துக்குனு தான் இருந்தாங்க! அப்பால எவனே ஒரு ராஜா வந்தானும்! அவன் நரபலி கொடுக்கிறவங்கள தூக்குப் போட்டுடு வானும்! அதோட நின்றுபோச்சு! அந்தமாதிரி நாங்க விடுவமா! எங்க தெய்வத்துக்கு நரபலி தான் முக்கியம்! உன்னை எங்க சாமிதானே இங்க கொண்டு வந்துச்சி!

சிவநேசன்—அரசனுடைய சட்டத்திற்குத் தெய்வமும் அடங்கி விட்டது! நரபலியை ஒழிக்கவந்த காருண்ய அரசனைப் போல ஆடு கோழி முதலிய ஜீவராசிகளைப் காப்பதற்கு ஒரு அரசன் வரப்படாதா?

வேடராஜன்—அடே! ஏண்டா சும்மா பார்க்கிறீங்க. தம்பி! கோயில் முன் நில்லு.

சிவநேசன்—ஆ பரமேசா! இது என்ன கூத்து! என் வாழ்நாள் முழுமையும் துன்பந்தானு! இந்த காட்டு மிராண்டிகளுக்கு தருமம் போதிப்பதில் பிரயோஜனமில்லை.

[ஆட்டைக் கட்டிக்கொண்டு சிவநேசன் அழல்.]

(சிறைவாயில் நின்றழுதாள் என்றமெட்டு)

பல்லவி

ஊமைச் சகோதரனே உனை கைவிட்டேன் (ஊ)

சரணம்

தீமை புரியுமெந்தன் தீய பெற்றோரை மீண்டு
நாமிந்த காட்டை நாடினோம் நமன் கைபட்டோம்
பாவி யென்னை நம்பி பாதியிரவில் வந்தாய்
ஆவியிழக்கலானாய் ஐயோயென்செய்வாய்(ஊ)

[வேடர்கள் சிவநேசனையும் ஆட்டையும் நிறுத்தல்.]

திம்மன்—(வேடராஜனைப் பார்த்து) ஐயா நான் கற்பூரம் எத்தி ஓசக்க தூக்குவன் அப்ப அந்த பையனை நீங்க வெட்டிப் புடுங்க. ஆட்டை உங்க மச்சான் வெட்டட்டும்.

[இருவரும் கத்தியை ஓங்கி நிற்றல். பூசாரி உள்ளே செல்லல். கார் சப்தம் கேட்டு எல்லோரும் திரும்பிப் பார்த்தல். கார் வருதல் எல்லாரும் ஓடல்.]

சர்க்கில்—காச் தம்! காச் தம்! (Catch them! Catch them)

போலீஸார் ஓடி பலரை பிடித்தல். சிவநேசனையும் ஆட்டையும் சர்க்கில் பிடித்து வரல்.

சர்க்கில்—தம்பி! நீ யார்! இங்கு ஏன் வந்தாய்!

சிவநேசன்—ஐயா நான் எனுகி குப்பம். மன்னார்சாமி நாய்க்கர் பிள்ளை.

சர்க்கில்—நீ! இவர்களிடம் எப்படி அகப்பட்டாய்.

சிவநேசன்—எல்லாம் என் தலைவிதி! நான் இங்கு வந்த தன் காரணம் பெரிய பாரதமாக விருக்கும்! சிறு தெய்வங்களை வணங்க மாட்டேனென்றும் ஆடு கோழி பலி கொடுக்கக் கூடாதென்றும் சொன்னேன். அத ஞல் பல துன்பங்கள் பட்டு ஊரை விட்டு இந்த ஆட் டோடு ஓடி வந்து விட்டேன்! கடைசியில் இந்தப் பாதகரிடத்தில் அகப்படடுக் கொண்டேன்! "கட வுளை நம்பினோர் கைவிடப் படார்" என்ற முது மொழிப்படி நான் சர்வேஸ்வரன் கிருபையாலும் தங்க ளுடைய முயற்சியாலும் உயிர் தப்பினேன். இல்லை யேல் என்னையும் ஆட்டையும் இன்னேரம் பலி கொடுத்திருப்பார்கள்.

சர்க்கில்—அடடா! நல்ல காலம்! தம்பி! இன்றையதினம் ஜமீன்தாரர் ஆயிரக் கணக்காகப் பலியிடப் போகின் ருரே! நீ என்னமோ ஒரு ஆட்டைப் பிடித்துக் கொண்டு வந்தாயே!

சிவநேசன்—ஐயா! அப்படியா! தயை செய்து என்னை அங்கு கொண்டு போய் விடுங்கள்! அநேக நமஸ்காரம் செய்கின்றேன்!

சர்க்கில்—தம்பி! உன்னை அங்குதான் கொண்டு போகின் ருேம். இந்த திருடர்கள் ஜமீன்தாரர் வீட்டில் தான் திருடினார்கள்.

சிவநேசன்—ஆம்! ஆம்! இப்பொழுதுதான் அந்த வேட னும் சொல்லிக்கொண்டிருந்தான்.

[சர்க்கில், காரில் சிவநேசனையும் ஆட் டையும் ஏற்றிக்கொண்டு செல்லு தல். போலீஸார் வேடர்களை லாரி யில் அடைத்துக் கொண்டு பின் தொடரல்.]

## காட்சி 3.

### மேட்டூர் அம்மன் கோயில்.

[ஜமீன்தாரரும் அவர் மனைவியாரும் கோயிலின் இடப் பக்கத்தில் அம்மனை தரிசித்துக் கொண்டு நிற்றல். ஜனத்திரள் கூட்டங் கூட்டமாக ஆடு கோழிகளைத் தூக்கிக்கொண்டு அங்கு மிங்கும் செல்லல்.]

பூசாரி—பிரபு! நாங்கள் ஆரம்பிக்கலாமா?

ஜமீன்தாரர்—ஆஹா ஆரம்பியுங்கள்.

பூசாரி—(மேளக்காரரைப் பார்த்து) மேளம் வாசியுங்கள்! மேளம் வாசியுங்கள்! பறையுங் கொட்டுங்கள்.

[பூசாரி பூஜை செய்தல். மற்றப் பூசாரிகள் சிலம்போடு வந்து நிற்றல்.]

கந்தப்ப பூசாரி—(ஜமீன்தாரரிடம் வந்து) பிரபு! பூஜை நடந்து விட்டது! பலிதான் நடக்க வேண்டும்!

ஜமீன்தாரர்—சரி நடக்கட்டும்!

கந்தப்ப பூசாரி—(மற்றப் பூசாரிகளையும் பார்த்து) ஏனையா நிற்கிறீங்க! அரண்மனைக் கடாவைப் பிடிச்சு வாங்க. மாரியப்ப பூசாரி! வாய்யா! வேலை நடக்கணும்மே!

[ஒரு ஆட்டுக்கடாவைப் பிடித்து கோயில் முன் நிற்க வைத்தல். ஒருவன் வாளை யேந்தி நிற்றல். பூசாரிகள் பாட்டு பாடுதல்.]

சிவநேசன்—(உரத்த குரலில்) பலியிடாதீர்கள்! நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்! அந்தத் திக்கற்ற ஏழை உயிர்களுக்காக என்னை பலி கொடுங்கள்! (ஓடி வருதல்.)

[போலீஸாரும் பல திருடர்களுடன் வருதல்]

ஜமீன்தாரர்—பூசாரி! சற்றுநில்! போலிஸார் வருகின்றார்கள்; யாரோ ஒரு சிறுவன் பலியிடாதிர்கள்! என்னை பலி கொடுங்கள் என்று ஓடி வருகின்றான்! பார்ப்போம்!

[சிவநேசன் ஆட்டுடன் ஜமீன்தாரர் எதிரில் நின்று பாடல்.]

இராகம்—தன்யாசி—தாளம்—ஆதி.
(நிச்சயமாய் தீர்க்கக் கடன் என்ற மெட்டு.)

பல்லவி.

உத்தம ஜென்மத் துதித்த உயர்மதி ஆண்மையாளா
உமக்கிது நியாயமாகுமோ ?

அநுபல்லவி.

புத்தியற்றப் பெண்கள் கூடி
பித்தரா வேசங்க ளாடி
சத்திமாரி தேவி நாடி
சுற்றிடுவர் ஆட்டைத் தேடி (உத்தம)

சரணம்.

குற்றமும் அறிவும் வலி யற்ற ஆடு கோழி தம்மை
கொன்று பலி செய்வதெதற்கு ?
கொக்கரக்கோ அம்மாவெனக் கூவியழத்தலை வெட்டுங்
கோர மூடபக்தி யெதற்கு ?
பெற்றப் பிணியாவும் போக்க
பேருலகில் மருந்துண்டு
உற்றநம் விதி மறந்து
உயிர்க் கொலை செய்யலாமோ? (உத்தம)

சிவநேசன்—ஐயா! ஆயிரக் கணக்கான திக்கற்ற ஏழை உயிர்களை பலியிட தாங்களுமா உடன்பட்டுத் தலைமை

வகித்து நிற்கின்றீர்கள்! அறிவற்ற காட்டு மக்களால் கற்பிக்கப்பட்டு, நம்நாட்டு பெண்மக்களாலும் பாமரர்களாலும் பெருகிய இந்த அநாமதேய சிறு தெய்வ வழிபாட்டை தாங்கள் பிரசித்தி செய்யலாமா! குற்றமற்ற ஊமைப் பிராணிகளை அம்மா அம்மாவென்றலற தலை வேறு உடல் வேறாக வெட்டித்தள்ள உங்கள் மனமும் ஒருப்பட்டதா? கொலையும் குடியும் விரும்பும் தெய்வமும் உலகில் உண்டா?

"உயிர்க் கொலையும் புலைப்புசிப்பு முடையவர்களெல்லாம்
உறவினத்தாரல்லர் அவர் புறவினத்தார்"

என்ற முதுமொழிப்படி இத்தகைய படுகொலையை விரும்பும் தெய்வத்தை தெய்வமென்று கூறலாமா? வணங்கலாமா அடியேனுக்கு ஒரு மஹாஞானி.........

[தயாசாகரர் ஓடிவரல்.]

தயாசாகரர்—சிவநேசா! வந்தேன்! வந்தேன்! கண்டேன்! ஆனந்தங் கொண்டேன்! நீயே கடவுள் நீயே அன்பு! நீயே ஜீவகாருண்யம்!

சிவநேசன்—அரசே! இதோ என் ஞானக்குரு வந்து விட்டார்! (ஓடி அவர் பாதத்தில் விழ்ந்து நமஸ்கரித்தல்.) (ஜமீன்தாரரும் நமஸ்கரித்தல்.)

தயாசாகரர்—எல்லோருக்கும் ஆசிர்வாதம்! (சிவநேசனை பக்கத்தில் நிறுத்தி அணைத்துக்கொண்டு சபை முன் நின்று பிரசங்கித்தல்.) ஜமீன்தாரர் அவர்களே! கந்தப்ப பூசாரி, சப்பாணி பூசாரி, மாரியப்ப பூசாரி, முதலியவர்களை அரஸ்ட் செய்யக் கட்டளை யிடுங்கள்.

ஜமீன்தாரர்—அப்படியே (சர்க்கில் இனிஸ்பெக்டரைப் பார்த்து) இன்ஸ்பெக்டரவர்களே ! அம் மூவரையும் அரஸ்ட் செய்யுங்கள்.

[அவ்வாறே கைது செய்தல். பூசாரிகள் நாலாபக்கமும் பார்த்து விழித்தல்.]

தயாசாகரர்—இந்தச் சிறுவரின் உண்மை ஒழுக்கத்தையும், உயிர்களிடத்துள்ள அன்பையும், கருணையையும், ஆதிஷேடனாலும் எடுத்துரைக்க முடியாது. இவர் ஆண்டின் இளையவராயினும் அறிவில் முதிர்ந்தவர். இவருக்கு சீவகாருண்யத்தின் சிறந்த சக்தியையும் சிறு தெய்வங்களின் இழிந்த கற்பனைகளையும் போதித்து உண்மை சிவபக்தனாகச் செய்தேன். அது முதல் (மாரியப்பப் பூசாரியைக் காட்டி) அந்த மாரியப்பப் பூசாரி அவனை அடித்துத் தன் போலித்தெய்வத்தை வணங்கும்படி வற்புறுத்தினான். என்னால் அளிக்கப்பட்ட இராமலிங்க ஸ்வாமிகள் அருட்பா புத்தகத்தையுங் கிழித்தெறிந்தான். உடனே நான் அதை அறிந்து ஜகன்னாத சந்நியாசி வேடம் பூண்டு வேறொரு புத்தகத்தை சிவநேசனுக்குக் கொடுத்துதவினேன்.

சிவநேசன்—(ஆச்சரியத்தோடு) ஆ! தாங்கள் தானா அந்த வேஷதாரி. ஆ! என்னே நன்றி! என்னே கருணை! அடியேன் வணக்கம் !

தயாசாகரர்—மன்னார்சாமி நாய்க்கருக்கு மாரியின் சக்தியைக் காட்ட அவருடைய வண்டி எருதுக்கும், ஊரிலுள்ள சிலருடைய மாடுகளுக்கும் இந்த பூசாரி வர்க்கத்தார் மருந்து கொடுத்துக் கொன்றார்கள். அன்று

காலையே (சப்பாணி பூசாரியைக் காண்பித்து) இவன் ஆவேசமாடிக் கொண்டு வீதிவீதியாகச் சுற்றி தன்னுலேயே இந்த நோய் உண்டாக்கப்பட்டதாக கூவிக் குதித்துப் பயமுறுத்தினன். கடைசியில் சிவநேச னின் இரு கைகளையும் மேலேகட்டி தொங்கவிட்டு தன் கையிலுள்ள பிரம்பால் அடித்துத் தன்னை வணங்கும்படி கேட்டான். அந்த சமயத்தில் ஜோஸ்யரைப் போல் நடித்து அந்த கஷ்டத்தினின்றும் மீட்டேன். அன்று இரவு அம்மன் உண்மை ரூபங் காட்டுவதாகக்கூறி சிவநேசனை இரவு 12-மணிக்கு நான்கு பேராக வந்து கட்டித் தூக்கிக்கொண்டு போனார்கள். அச்சமயம் நான் சிவநேசனுடைய வீட்டிற்கு எதிரிலுள்ள வைக்கோல் போரில் ஒளித் திருந்தேனுகையால் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றேன். அங்கு அம்மனைப்போல ஒருவன் உட்கார்ந்து கொண்டு சிவநேசனை வணங்கச் சொன்னன். அப்பொழுதும் சிவநேசன் மறுக்கவே அக்கினியில் போட்டுக் கொளுத்தும்படி அவன் தூதுவ வேடதாரிகளுக்குக் கட்டளை யிட்டான். அந்த சமயத்தில் என்னிடத்திலுள்ள (புலித்தோலைக் காட்டி) இந்த புலித்தோலை எடுத்து மூடிக்கொண்டு உறுமி உறுமி ஓடி வந்தேன். எல்லோரும் புலி! புலி! என்று பயந்து ஓடி விட்டார்கள். அவர்கள் இந்தப் பூசாரிகளே! காலையில் நானும் ஊருக்குள் சென்றேன்! ஊரில் சிவநேசனை அம்மன் தூக்கிக்கொண்டு போய் விட்ட தாக வதந்தி கிளம்பி விட்டது. அதன் பிறகு இன்று தான் என் உயிரினும் உயரிய உத்தம சிஷ்யனைக் கண்டேன். உயிர்களைப் பலி வாங்கும் கற்பனைத் தெய்வங்

களை வணங்கேனென்று உறுதியோடு பல இன்னல் களையுஞ் சகித்த என் ஜீவகாருண்ய சிவஞான சிஷ்யனைக் கலியுகப் பிரகலாதனேன்றே போற்றிப் புகழ்கின்றேன் !

சிவநேசன்—எனதாருயிரைக் காத்த ஞானப்புலியே ! இதைத்தான் குருபலம் பலமாயிருக்கிறதென்று கூறி னீரோ ! சீரும் சிறப்பும் வாய்ந்த தங்கள் சேவடியை அடியேன் என்றும் மறவேன் ! மறவேன் !! (நமஸ் கரித்தல்).

தயாசாகரர்—(சிவநேசனைக்கட்டித்தழுவி) யெடுத்து அருட் செல்வா ! அதற்கப்புறம் நீ என்ன கதியானய் ?

சிவநேசன்—(குருவைக் காண்பித்து) இந்த புலிக்கு பயந்து (சப்பாணி பூசாரியைக் காண்பித்து) அந்தத் தெய்வம் ஓடவே (மற்ற பூசாரிகளைக் காட்டி) இந்தத் தேவ தூதர்களும் ஓடிவிட்டார்கள் ! இத்தகைய தேவாதி தேவர்களெல்லாம் பஞ்சாய்ப் பறக்கும்போது நர மனிதனுகிய நானென் செய்வது ! (பூசாரிகள் வெட்கி தலை குனிதல்) நானும் புலியென்றே பயந்தோடி அந் நள்ளிரவிலேயே (ஆட்டைக் காட்டி) என் உயிர்த் தோழனைக் கூட்டிக் கொண்டு காட்டிற்கு வந்து விட் டேன் ! அங்கு (ஜமீன்தாரரைக் காட்டி) இப்பெரி யாரைச் சந்தித்து.........

ஜமீன்தாரர்—ஆ ! என் ஜீவகாருண்யக்குருவா ! ஆடு மாடு மேய்க்கும் பையனென்றல்லவோ நினைத்துவிட்டேன்! (உற்றுப்பார்த்தல்).

சிவநேசன்—ஆம்! ஆடு மாடு மேய்க்கும் சிறியவனை குரு வாக மதித்ததாலேயே இந்த பெரிய கொலைக்

குத் தலைவரானீர்! (ஜமீன்தாரர் வெட்கி தலை குனிதல்) அங்கு இரண்டு புளுக்களை (குருவைக் காட்டித்) தங்களருளால் மீட்டு விட்டு அக்காட்டிலுள்ள ஒரு துர்க்கைக் கோயிலில் இரவைக் கழித்தேன். பொழுது புலர்ந்ததும் (வேடர்களைக்காட்டி) இந்த காட்டு மனிதர்களெல்லாம் அவர்கள் தெய்வங்களுக்கு அடியேனை நரபலியாக கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள்! அங்குதான் பலிவழக்கங்கள் காட்டிலிருந்தே நாட்டிற்கு வந்தனவெனும் உண்மையை (வேடர்களைக் காட்டி) இந்த வேடர்களால் நன்குணர்ந்தேன்! நரபலியாகக் காட்டில் மடிய வேண்டிய நான் யார் செய்த தவத்தாலோ இந்த போலிஸ் அதிகாரிகளால் உயிர் தப்பினேன்!

ஜமீன்தாரர்—(பலியிட வந்துள்ள ஆடு கோழிகளைக் காட்டி) இந்தத் திக்கற்ற ஊமைப் பிராணிகள் செய்த தவமே! தாங்கள் அவ்வாபத்தினின்றும் மீண்டீர்!

சிவநேசன்—ஆஹா! (புன் சிரிப்போடு) மிகவும் சந்தோஷம்! மிகவும் சந்தோஷம்! எல்லா புண்ணியமும் தங்களுடையதே! தாங்களே அருளாளர்! அன்பாளர்! நமஸ்காரம்! நமஸ்காரம் (வணங்குதல்).

ஜமீன்தாரர்—(பதிலுக்கு) நமஸ்காரம்! நமஸ்காரம்!

தயாசாகரர்—சிவநேசா! மெச்சினேன்! மெச்சினேன்! ஜமீன்தாரர் அவர்களே தாங்களே மானிடப் பிறப்பிற்குரிய உண்மையான அறிவையும், அன்பையும், பெருமையையும் பெற்றவர்! ஆசிர்வாதம்! வாழ்விராக!!

[மன்னார்சாமியும் அவர் மனைவியும் ஓடிவரல்.]

மன்னார்சாமி—(மகனைக் கட்டிக்கொண்டு) என் கண்மணியே! சிவநேசா! புத்தியில்லாமல் பூசாரிப் பாவியால் உன்னைப் பல துன்பங்கள் செய்து விட்டேனே! பாவி! ஐயோ! ஐயோ! அடித்தேன்! உதைத்தேன்! கண்ணே! அப்பா! என் செய்வேன்! பாவிகள் கொலை செய்யத் துணிந்தார்களே! (அழுதல்).

மனைவி—என் செல்வமே! என் உயிரே! ஐயோ! ஒன்றுஞ் சொல்லத் தோணவில்லையே! (சாதுவைப் பார்த்து) சாமி! என் குழந்தையை எமனிடத்து இருந்து மீட்டீரே! நீங்களே அந்தக் குழந்தைக்குத் தாய் தந்தை! என் குழந்தையை மறுபடியும் பார்க்க என்ன பாக்கியஞ் செய்தேன்! பாவி பூசாரிகள் எங்கள் குடும்பத்தை அழிக்கப் பார்த்தார்களே.

சிவநேசன்—(இருவர் பாதங்களிலும் விழுந்து நமஸ்கரித்து) அம்மா தாங்களும் என் தந்தையும் முற்பிறப்பில் நற்றவம் புரிந்தமையால் அடியேனை நல்லுயிரோடு கண்டீர்கள்.

தாயுந் தந்தையும்—(அழுத வண்ணம்) ஆ! என் செல்வமே! இந்தப் பாவிகளையும் தாய் தந்தையென்று கூறுகின்றாயா? ஐயோ! தெய்வமே!

ஜமீன்தாரர்—சுவாமி! இவர்களிருவரும் சிவநேசனின் தாய் தந்தையர்களா?

தயாசாகரர்—ஆமாம்! ஆமாம்! சேற்றில் செந்தாமரை பூத்தது போல இவர்கள் வயிற்றில்தான், சிவநேசன் ஜெனித்தது!

ஜமீன்தாரர்—(இருவருக்கும் வந்தனங்கூறி) நீங்களிருவரும் இப்பேரறிவுள்ள மகனைப் பெற முற்பவத்தில்

என்ன தவம் செய்தீர்களோ ! நீங்களே பெரும் பாக்கியஞ் செய்தவர்கள் ! பாக்கியஞ் செய்தவர்கள் !!

தயாசாகரர்—அதற்கென்ன ஆக்ஷேபனை ! ஐயா நாயக்கரே! தம்பியை விடுங்கள்! இனி நடக்க வேண்டியதைப் பாருங்கள்! இனியாகிலும் புத்தியோடு நடந்து கொள்ளுங்கள். அம்மா (சிவநேசன் தாயாரைப் பார்த்து) சிவநேசனை விடுங்கள். இனி உங்கள் மகனை செல்வத்தோடும் சிறப்போடும் கண்டு களியுங்கள்.

ஜமீன்தாரர்—சுவாமிகளே! நான் என் அறியாமையால் இந்தப் பாழான விழாவை ஆரம்பித்து விட்டேன்; மன்னிக்க வேண்டும்.

ஜமீன்தாரர் மனைவி—அரசே! அடியாளை மன்னிக்கக் கோருகின்றேன். இந்த விழாவுக்கு நானே காரணம். தாங்கள் காரணமல்ல. நமக்குச் சந்ததி யில்லையேயென்று நானும் மாமியும் பேசிக்கொண்டிருக்கையில் கந்த பூசாரி வந்தான். அவன் மாரியம்மன் விழாவை நம்முடைய பரம்பரையார் வருடா வருடம் தவறாது நடத்தி வந்ததாகவும் அதனால் நம் சந்ததி விளங்கினதாகவும் தற்காலம் தாங்கள் அதை மறந்து விட்டதால் சந்ததி யில்லாமல் போய் விட்டதாகவுங் கூறினான். அதற்கு நான் ஐயா ஒப்பமாட்டாரென்றும், அவருக்கு இதிலெல்லாம் நம்பிக்கையில்லை யென்றுங் கூறினேன். பிறகு பூசாரி, அம்மன் என் கனவில் வந்து அழுததாகக் கூறும்படி கற்றுக் கொடுத்தான். அதையே தங்களிடம் சொன்னதே ஒழிய நான் அவ்வாறு கனவு காணவேயில்லை. பெண் புத்தி பின்புத்தி யென்பது பழமொழியல்லவா ! மன்னிக்கவும் ! மன்னிக்கவும் ! (நமஸ்கரிக்கின்றாள்.)

ஜமீன்தாரர்—ஆ! ராதா மன்னித்தேன். (பூசாரியைக் கோபத்தோடு பார்த்தல்)

சப்பாணி பூசாரி—(ஜமீன்தாரர் காலில் விழுந்து) அரசே! நான் தான் மன்னார்சாமி நாய்க்கர் எருதையும் மற்ற எருதுகளையுங் கொல்ல மருந்து கொடுத்தவன். ஆவேசம் வந்தவன் போல் ஆடி சிவநேசனை அடித்தவனும் நானே. அன்று இரவு அம்மன் வேடம் பூண்டவர்களும் நாங்கள் தான். பாழான சாண் வயிற்றுக்காக செய்துவிட்டோம்! சாமி மன்னிக்கவும்! சாமி மன்னிக்கவும்!

[கந்தப்ப பூசாரியும் மாரி பூசாரியும் ஜமீன்தாரர் காலில் விழுந்து சாமி மன்னிக்கவேண்டும் என்று கேட்டு தலை குனிந்து நிற்றல்.]

தயாசாகரர்—ஜமீன்தாரரே! பார்த்தீரா பகல் மோசத்தை! இந்தத் தெய்வங்கள் வந்த வரலாற்றைக் கேளுங்கள். மாரியென்பது ஒரு நோயின் பெயர். சமஸ்கிருதத்திலே "மரணங்கரோதி மாரி" என்று இலக்கணங் கூறுகின்றது. மாரியெனும் நோய் சிலநாளைக்குள் மரணத்தை உண்டாக்குமென்றும், மாமாரி யென்பது 5, 6 நாளைக்குள் கொன்றுவிடு மென்றும், மஹம்மாரி யென்பது கண்டவுடனே கொன்றுவிடு மென்றும் வைத்திய சாஸ்திரங்களில் கூறப் பட்டிருக்கிறது. அந்த நோய்களுக்கே பிற்காலத்தில் முகம், கை, கால், முதலிய ரூபங்கள் உண்டாக்கி, பல பெயர்கள் கொடுத்து, நோய்களை உண்டாக்குந் தெய்வங்களென்றும், ஆடு, கோழி முதலிய உயிர்ப் பலியால் நோய்களைத் தீர்க்குந் தெய்வங்களென்றும், பிள்ளை அளிக்

குந் தெய்வங்களென்றும் இன்னும் பலபல சக்திகள் கற்பிக்கப்பட்டு பாமர மக்களை ஏமாற்றி பொருள் பறிக்க வழி தேடிக்கொண்டார்கள். இந்த சிறு தெய்வங்களைப் பற்றி, மஹா வீரரோ, புத்தரோ, அன்றி நமது நாயன்மார்களோ, ஆழவாராதியரோ, கூறவே யில்லை. மேலும் பின்வந்த பெரிய பெரிய ஞானிகளாலும், தாயுமானுர், பட்டினத்தார், இராமலிங்கர் போன்ற தவஞானிகளாலுங்கூட கூறப்படவில்லை.

“பெருகிய பொருளுடையா ரம்பலத்தே நடிக்கும்
  பெருந்தகையென் கணவர் திருப்பேர் புகலென்கின்ருய்
அருகர் புத்தர் ஆதியென்பேன் அயனென்பேன் நாரா
  யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவனென்பேன்:
பருகுசதா சிவனென்பேன் சத்தி சிவமென்பேன்
  பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரமமென்பேன்
அருவுசுத்த பிரமமென்பேன் துரிய நிறைவென்பேன்
  சுத்தசிவ மென்பனிவை சித்து விளையாட்டே ”

என்று எடுத்தருளி யுள்ளபடி உண்மைக் கடவுளை வழிபட்டு ஜீவகாருண்ய நல்லறத்தைக் கடைபிடித்தொழுகி வாழும்படி ஆசிர்வதிக்கின்றேன்.

ஜமீன்தாரர்—சுவாமி! என்னே இந்தப் பூசாரிகள் செய்கின்ற மோசம்! தெய்வம் செய்ததாக உலகத்தாரை ஏமாற்ற என்னென்ன வழிகளைக் கற்றுள்ளார்கள் பார்த்தீர்களா! கடைசியில் விசாரித்து இப்பாவிகளைத் தண்டிக்கின்றேன். எனக்கு இந்த ஜமீனை ஆளுவதற்கு சந்ததி யில்லாமையால் அறிவும் அருளும் நிறைந்த சிறுவனுகிய சிவநேசனை அடியேன் ஸ்வீகாரமாக ஏற்றுக்கொண்டு ஜமீனை அவனுக்கே தானமாக அளித்து விடுகின்றேன்!

சிவநேசன்—ஐய ! பொறுங்கள் !

"மண்ணுல கதிலே யுயிர்கள்தாம் வருந்தும்
வருத்தனை யொருசிறி தெனினுங்
கண்ணுறப் பார்த்துஞ் செவியுறக் கேட்டுங்
கணமும்நான் சகித்திட மாட்டேன்
எண்ணுறு மெனக்கே நின்னருள் வலத்தால்
இசைந்தபோ திசைந்தபோ தெல்லாம்
நண்ணுமவ் வருத்தந் தவிர்க்கநல் வரந்தான்
நல்குத லெனக்கிச்சை யெந்தாய்."

உலகத்திலே மனிதப் பிறப்பை யடைந்தவர்கள் புசிப்பதற்குரிய மரக்கறி பதார்த்தங்களை விடுத்து, அனித்தியமான ஜாண் வயிற்றை நிரப்புவதற்காகத் திக்கற்ற ஊமைப் பிராணிகளைக் கொன்று அரக்கர் போல ஊனைப்புசிக்கும் கோர மிருகத்தனத்தையும், உண்மைக் கடவுளை, உண்மைத் தருமத்தை, உண்மை ஒழுக்கத்தை மறந்து துன்பத்தைத் தருகின்ற தெய்வமென பல பெயர்களைக் கொடுத்து ஆயிரக் கணக்கான ஆடுகளையும், கோழிகளையும், எருமைக்கடாக்களையும், பன்றிகளையும், தங்களைப்போன்ற சில ஜமீன்காரர்களும், செல்வந்தர்களும், படித்த மக்களும் பாமர மக்களும் இரக்கமின்றி ஆங்காங்குப் புரியும் பலவித கொலைக் கோரங்களையுங் காணவும், கேட்கவும், சகிக்க முடியவில்லை ! இத்தகைய கொடுமையை நீக்கி ஏழை உயிர்களை அப்பெரும் ஆபத்தினின்றும் விடுவித்து அவைகளை இன்புற வாழ்விக்க வேண்டிய தொண்டினைப் புரியவே எம்பெருமானை வரம் வேண்டி வந்துளேன் ! ஆகையால் என்னுடைய சொந்த ஆஸ்தியை

யும் வேண்டேன் ! தாங்களளிக்கவரும் பெருஞ் செல்வத்தையும் வேண்டேன் ! வேண்டேன் ! அவைகள் துன்பத்திலாழ்த்தும். எவ்வுயிர்க்கும் அன்பாயிருத்தலாகிய ஜீவகாருண்ய செல்வமே என்னுருயிரை விளக்கும் மெய்ச் செல்வம் ! அதையே நான் முக்காலும் விரும்புகின்றேன் ! அடியேன் ஒருவனுக்கு உம்முடைய ஜமீனை அளிக்குந் தானத்தைவிட உம்முடைய ஜமீனிலுள்ள ஏழை மக்கள் பலருக்குங் கொடுத்துதவுந் தானம் பெரிதல்லவா ? நான் ஒருவன் உம்மை வாழ்த்துவதினும் பலர் வாழ்த்துதல் மேன்மையல்லவா ! ஆழ்ந்தாலோசித்து ஏழை மக்களின் பசியாற்றி திக்கற்ற பிராணிகளைப் பலியினின்று மீட்டு, வயிற்றுப் பிழைப்புக்காகக் குற்றமிழைத்த புத்தியற்ற பூசாரிகளையும் வேடர்களையும் விடுதலை செய்து களிப்பிரேயாகில் தங்களுடைய புகழ் பூமிமுதல் புரந்தரலோகம் வரை எக்காலும் அழியாது போற்றப்பட்டுப் புண்ணியமும் தங்கட்கு உண்டாகும்.

ஜமீன்தாரர்—ஆ ! என்னே வீரம் ! என்னே உண்மை ! என்னே இரக்கம்! ஏழைகளிடத்தும் உயிர்களிடத்துங் காட்டுங் கருணையால் எத்தகைய பெரும் போகாதி போகத்தையும் வெறுக்குந் தியாகந்தானென்னே ! பகையாளிக்கு மிரக்கங் காட்டும் பண்புதானென்னே! இந்த இளம் வயதில் உயர்ந்த ஞானச் செல்வத்தையடைந்த புண்ணியமும் புகழுந் தானென்னே ! என் அறிவை விளக்கிய அன்புநிறை சிவநேசா ! கடவுளின் உண்மையைக் காட்டியருளிய கருணைநிறை ஞானியே! என் குடிமக்களே ! நானும் என் போகாதி போகத்

யைத் துறந்தேன்! இப்பெரியார்களைப் பின்பற்றி எவ்வுயிரிடத்தும் அன்புடையவனாகி அருட்பெருஞ் சோதி தனிப்பெருங் கருணையை அடைய முயல்வேன்! நானும் என் முன்னோர்களும் எத்தனையோ குடும்பங்களை ஒரு சிறிது நிலமுமின்றி எத்தனையோ ஆண்டுகளாக அடிமைகளாக்கிச் சுக போகங்களையடைந்து வந்த வஞ்சனையையும் ஜீவகாருண்யமற்ற செய்கையையும் நினைக்குந்தோறும் என் மனம் மானமடைகின்றது. இனி நான் அச்செல்வத்தையும் வஞ்சனை வாழ்வையும் விடுத்து என் ஜமீனிலுள்ள குடும்பங்களில் நிலமற்றவர்களுக்கும், ஒரு ஏக்கரும் அதற்குக் கீழ்பட்ட நிலங்களையுடையவர்களுக்கும் ஜாதிபேதமின்றி என் ஜமீன் நிலங்களை சமத்துவமாகப் பங்கிட்டுத் தானமாகக் கொடுத்து விடுகின்றேன்! இனி என் ஜமீனிலுள்ளவர்கள் இன்பமாக ஜமீன் பங்கு சொத்துகளை சர்வ சுதந்தரமாக ஆண்டு அனுபவித்து எல்லா உயிர்களையுந் தன்னுயிர் போல் பாவிக்குஞ் ஜீவகாருண்யத்தையே விரதமாகக் கொண்டு புலாலுண்ணாமலும், உயிர்ப்பலியிட்டு வணங்கும் சிறு தெய்வ வழிபாட்டை அறவே யொழித்து உண்மைத் தெய்வங்களை வழிபட்டும் வாழ வேண்டுமாகப் பிரார்த்திக்கின்றேன். பூசாரிகள் இனி தங்கள் கொடுந்தொழிலை மறந்து சிறு தெய்வமெனும் போலியைப் பரப்பவிடாது ஒழிக்க வேண்டும். இப்பொழுது செய்த குற்றத்திற்காக சிவநேசனின் வேண்டுதலினாலும் ஜீவகாருண்ய கொள்கையினாலும் மன்னிக்கின்றேன். வேடர்களையும் அந்த சொத்தோடு விடுதலை செய்து விடுகின்றேன். நீங்கள் பலியிட வந்த ஜீவராசிகளை உங்கள் குழந்தைகளைப் போல் பாதுகாக்கவும் வேண்டுகிறேன்.

ஜனங்கள்—அஹிம்ஸா பரமோதர்மிகி ஜே! தயாசாகர சுவாமிக்கு ஜே! கலியுகப் பிரகலாதனுக்கு ஜே!! ஜமீன்தாரருக்கு ஜே ஜே!!

[சிவநேசன் பாடல்]

(காந்திசிஷி நம்மைக் கார்த்திடுஞ் சமரசி என்ற மெட்டு)

பல்லவி

கொல்லாமையே நாம் கொண்டாடில் மேன்மையே
கொல்லாமையே உயிரைக் கொல்லாமையே

சரணம்.

எல்லா உயிர்களுங்கை கூப்பித் தொழும் பெருமையே
இன்பமொடு அன்புளமே இயற்றுவிக்கும் வாய்மையே
பொல்லாக் குணங்கள் போக்கிப் புனிதராக்குந் தூய்மையே
புண்ணியராய்ப் பிறப்பிகக்கு புகுவர் மோக்ஷப் பதவியே
போற்றுவீரே அருளைக் காத்திடுவீரோ நீரே (கொல்லா)

தேவர் தமக்கிந்திரன்திரு மலைகளிலே மேருவாம்
தினகரனே கிரகங்களுக்குத் திகழுமாழி நீருக்காம்
பூவில்வாழ் மாந்தரேற்றிப் புகழுஞ் சக்கிரவர்த்தியாம்
புங்கவன் மறைகளிலே போற்றுஞ் ஜீவகாருண்யம்
புண்ணியரே அன்பை நண்ணியே வாழுவீரே (கொல்லா)

அரிதரிது மானிடமென் றறைந்த மொழி மறந்தவர்
ஆருயிரைக் கொன்றுநாளும் ஐயோ புண்ணை யருந்துவர்
சிறுதெய்வமெனவே காளி மாரி செல்லி சேவிப்பர்
சிந்தையிலே கருணையின்றி ஜீவஹிம்சை செய்குவர்
சோராதீரே பலி கோராதீரே நேரே (கொல்லா)

சுபம் ! சுபம் !! சுபம் !!!

முற்றிற்று !

Printed at the Model Press, Godown Street, G. T. Madras.